லோகிதன்
பதிப்பகம்







# மூன்று மகாகவிகள்

டாக்டர் சிலோன் விஜயேந்திரன்
எம்.ஏ.டி.லிட்.

# மூன்று மகாகவிகள்

டாக்டர் சிலோன் விஜயேந்திரன் எம்.ஏ., டி.லிட்.

லோகிதன் பதிப்பகம்
199, இமயம் காலனி,
அண்ணாநகர், மேற்கு விரிவாக்கம்
சென்னை-101

முதற்பதிப்பு அக்டோபர் 1993



விலை : ரூ. 15-00

(இந்தியாவில்)

நன்றிக்குரிய நட்புள்ளங்கள் :

★ வெ, தவராஜ்சிங்கம்

★ ஆர். சி. பிரகாஷ்

★ ஏஜாஸ்அலி

★ முனீராபேகம்

★ ஓவியர் எஸ்.கே.

★ பி. பி. சுதர்சன்

★ எம், பரமசிவம் (பி,டி,அ,)

---

அச்சுப் பதிவு :

ஸ்ரீ கன்னி அச்சகம்

சென்னை-5

# மூன்று மகாகவிகள்

டாக்டர் சிலோன் விஜயேந்திரன் எம்.ஏ.,டி.லிட்,

**லோகிதன் பதிப்பகம்**

199, இமயம் காலனி,

அண்ணாநகர், மேற்கு விரிவாக்கம்

சென்னை-101

முதற்பதிப்பு அக்டோபர் 1993



விலை : ரூ. 15-00

(இந்தியாவில்)

நன்றிக்குரிய நட்புள்ளங்கள் :

★ வெ. தவராஜசிங்கம்
★ ஆர். சி. பிரகாஷ்
★ ஏஜாஸ்அலி
★ முனீராபேகம்
★ ஓவியர் எஸ்.கே.
★ பி. பி. சுதர்சன்
★ எம். பரமசிவம் (பி.டி.அ.)

---

அச்சுப் பதிவு :

ஸ்ரீ கன்னி அச்சகம்

சென்னை-5

# முன்னுரை

இருபதாம் நூற்றாண்டுக் கவிவானில் புதுமைச் சுடர்வீசி ஞாயிறாய் உதயமானான் மகாகவி பாரதி.

இந்நூற்றாண்டின் இரண்டாவது மகாகவியாக அரும்பிய பாரதிதாசன், தனது பொன்னார்கவிதைகளால் பொன்றாப் புகழ் எய்தினான்.

பாட்டாளிவர்க்கத்திற்காக அர்ப்பண உணர்வுடன், எழில் கொஞ்சும் ஆவேசக்கவிதைகளை புதிய களத்திலே நின்றுபாடியும், சுயவாழ்வுப் பெருமிதங்களையும், வேதனைகளையும் உயிரின் ராகமென ஒலிக்கும் உன்னதக் கவிதைகளாய் படைத்தும் இந்நூற்றாண்டின் மூன்றாவது மகாகவியாய் கம்பீரமாய் சுடர்கின்றான் கம்பதாசன்.

பேரறிஞர் வ. ரா. அவர்கள் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே, ''காளிதாசன் (அசல்) காளிதாசன் (பாரதியார்), பாரதிதாசன் (சுப்புரத்தினம்), கம்பதாசன் (ராஜப்பா) இவர்கள் நம்நாட்டு முதல்த்தரக் கவிஞர்கள் இவர்கள் பிறவிக் கவிஞர்கள். பயிற்சிக் கவிஞர்கள் அல்ல''

—என்று உள்ளாழ்ந்த உயரிய ரசனாபாவத்துடன் எழுதியுள்ளமை பெருண்மையாகும்!

இருபதாம் நூற்றாண்டின் முப்பெரும் மகாகவிகளான பாரதியார், பாரதிதாசன், கம்பதாசன் ஆகியோர் கவிதைகளில் அதிகமாக மேலோங்கி நிற்கும் சிறப்பம்சங்களை— கொள்கைக்கோலங்களைத் தெளிவாக அடையாளங் காட்டும் வண்ணம் இந்நூலை எழுதியுள்ளேன்.

தமிழகத்தில் மட்டுமல்லாது இலங்கை, லண்டன், அமெரிக்கா, கனடா, பிரான்ஸ், ஜெர்மனி போன்ற பலப் பல நாடுகளில் வாழும் தமிழ்ப்பெருங்குடிமக்கள் எனது படைப்புகளை வரவேற்பது என் இதயத்தை ஆனந்த ஊஞ்சலில் ஆடச்செய்கிறது.

இறையருள் அனைவர்க்கும் வாய்க்கட்டும்.

51, அபிபுல்லா சாலைப் தெரு. அன்பன்

திருவல்லிக்கேணி **சிலோன் விஜயேந்திரன்**

சென்னை-5

# காணிக்கை



**யாழ். நீராவியடி ஆறுமுகம் வெற்றிவேல்**

*மலர்ந்தது* 28-10-1923

*உதிர்ந்தது* 27-2-1970

இந்நூல்,

வெ. தவராஜசிங்கம் (சென்னை)

வெ. புஷ்பராஜசிங்கம் (பிரான்ஸ்)

வெ. வில்வராஜசிங்கம் (பிரான்ஸ்)

வெ. சபா ராஜசிங்கம் (பிரான்ஸ்)

வெ. சற்குணாம்பிகை (யாழ்ப்பாணம்)

வெ. அமிர்தாம்பிகை (ஜெர்மனி)

வெ. சுகிர்தாம்பிகை (பிரான்ஸ்)

வெ. கிருதாம்பிகை (யாழ்ப்பாணம்)

ஆகியோர் சார்பில், அவர்களின் பாசத்தந்தையார் அமரர் ஆறுமுகம் வெற்றிவேல் அவர்களுக்குக் காணிக்கை செய்யப்படுகிறது.

# முன்னுரை

இருபதாம் நூற்றாண்டுக் கவிவானில் புதுமைச் சுடர்வீசி ஞாயிறாய் உதயமானான் மகாகவி பாரதி.

இந்நூற்றாண்டின் இரண்டாவது மகாகவியாக அரும்பிய பாரதிதாசன், தனது பொன்னார்கவிதைகளால் பொன்றாப் புகழ் எய்தினான்.

பாட்டாளிவர்க்கத்திற்காக அர்ப்பண உணர்வுடன், எழில், கொஞ்சும் ஆவேசக்கவிதைகளை புதிய களத்திலே நின்றுபாடியும், சுயவாழ்வுப் பெருமிதங்களையும், வேதனைகளையும் உயிரின் ராகமென ஒலிக்கும் உன்னதக் கவிதைகளாய் படைத்தும் இந்நூற்றாண்டின் மூன்றாவது மகாகவியாய் கம்பீரமாய் சுடர்கின்றான் கம்பதாசன்.

> பேரறிஞர் வ. ரா. அவர்கள் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே, ''காளிதாசன் (அசல்) காளிதாசன் (பாரதியார்), பாரதிதாசன் (சுப்புரத்தினம்), கம்பதாசன் (ராஜப்பா) இவர்கள் நம் நாட்டு முதல்த்தரக் கவிஞர்கள் இவர்கள் பிறவிக் கவிஞர் கள். பயிற்சிக் கவிஞர்கள் அல்ல''

—என்று உள்ளாழ்ந்த உயரிய ரசனாபாவத்துடன் எழுதி யுள்ளமை பேருண்மையாகும்!

இருபதாம் நூற்றாண்டின் முப்பெரும் மகாகவிகளான பாரதியார், பாரதிதாசன், கம்பதாசன் ஆகியோர் கவிதை களில் அதிகமாக மேலோங்கி நிற்கும் சிறப்பம்சங்களை— கொள்கைக்கோலங்களைத் தெளிவாக அடையாளங் காட்டும் வண்ணம் இந்நூலை எழுதியுள்ளேன்.

தமிழகத்தில் மட்டுமல்லாது இலங்கை, லண்டன், அமெரிக்கா, கனடா, பிரான்ஸ், ஜெர்மனி போன்ற பலப் பல நாடுகளில் வாழும் தமிழ்ப்பெருங்குடிமக்கள் எனது படைப்புகளை வரவேற்பது என் இதயத்தை ஆனந்த ஊஞ்சலில் ஆடச்செய்கிறது.

இறையருள் அனைவர்க்கும் வாய்க்கட்டும்.

51, அபிபுல்லா சாஹிப் தெரு.
திருவல்லிக்கேணி
சென்னை-5

அன்பன்
**சிலோன் விஜயேந்திரன்**

# காணிக்கை



## யாழ். நீராவியடி ஆறுமுகம் வெற்றிவேல்

மலர்ந்தது
28-10-1923

உதிர்ந்தது
27-2-1970

இந்நூல்,

வெ. தவராஜசிங்கம் (சென்னை)

வெ. புஷ்பராஜசிங்கம் (பிரான்ஸ்)

வெ. வில்வராஜசிங்கம் (பிரான்ஸ்)

வெ. சபா ராஜசிங்கம் (பிரான்ஸ்)

வெ. சற்குணாம்பிகை (யாழ்ப்பாணம்)

வெ. அமிர்தாம்பிகை (ஜெர்மனி)

வெ. சுகிர்தாம்பிகை (பிரான்ஸ்)

வெ. கிருதாம்பிகை (யாழ்ப்பாணம்)

ஆகியோர் சார்பில், அவர்களின் பாசத்தந்தையார் அமரர் ஆறுமுகம்வெற்றிவேல் அவர்களுக்குக் காணிக்கை செய்யப்படுகிறது.

# மூன்று மகாகவிகள்

## மகாகவி பாரதியார்

பாரதியார் தண்டமிழ் மக்களைத் தட்டியெழுப்பிய மகாகவி.

காலமாற்றத்தை உணராது இருளில் மூழ்கிக்கிடந்த தமிழர்கள் மேனிலை எய்த வேண்டும் என அவன் அவாவுற்றான்.

இருபதாம் நூற்றாண்டில் அரும்பிய நவகவிதைகளின் பிதாமகன் அவனே!

''செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே''

என்று பாடிக்களித்தான்.

''முத்தமிழ் மாமுனி நீள்வரையே—நின்று
மொய்ம்புறக் காக்கும் தமிழ்நாடு—செல்வம்
எத்தனையுண்டு புவிமீதே—அவை
யாவும் படைத்த தமிழ்நாடு''

என இறும்பூதெய்தும் அவன்,

கல்வியிற் சிறந்த தமிழ்நாடென்றும், கம்பன் பிறந்த தமிழ்நாடென்றும், வள்ளுவனைப் புவிக்கீந்ததன் மூலம் 'வான்புகழ்' பெற்ற தமிழ் நாடென்றும் பாடிப் பரவசமுற்றான்.

இவ்வண்ணம் பல சிறப்புகளைக் கொண்டிருந்த தமிழ் நாடு தமது காலத்தில் சோம்பிக் கிடந்தமை கண்டு பாரதி மனம் வெந்தான்.

தமிழர்களின் தாழ்வுநிலைகண்டு அவன்,

"பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு,
நாமமது தமிழரெனக் கொண்டு இங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்வீர்!"

எனத் தமிழரை வினவுகிறான்.

தமிழர்கள் தமது தாய்மொழியாம் தமிழை மதியாது வாழ்தல் கண்டு மனம் கொதிக்கிறான்.

பன்மொழிப் புலமை மிக்க அவன்,

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்"

என்றும்,

"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்"

என்றும் ஆர்த்தெழுந்து ஆவேசமாகப் பாடுகிறான்.

ஆங்கிலம் போன்ற பிறமொழிகளில் நவீன காலச் சிந்தனைகள் நிரம்பி வழிகின்றன. அவை தமிழில் இல்லையே என்ற வேதனை பாரதியை வாட்டுகிறது.

"பிறநாட்டு நல்லறிஞர் சாஸ்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்"

என்கிறான்.

''இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்''

எனக் கூறுமவன்,

நமது தமிழர்கள் காலத்தை வீண் செய்து கொண்டிருக்கும் போக்கினைக் கடிந்து,'

''மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை''

என ஆணித்தரமாக அறைகிறான்.

''தமிழைக் காக்கப் பிறந்தவர் தாங்களே'' என்று வீம்போடு மார்தட்டித் தம்மை வளர்த்துக் கொள்ளும் போலிப் பேர்வழிகள் இந்நாள் போலவே பாரதி காலத்திலும் மலிந்திருந்தார்கள்.

தமிழையும், தமிழர்களையும் ஏய்த்துப் பிழைத்த எத்தர்களைக்கண்டு பாரதி கனன்றெழுகிறான்.

இலட்சிய வீறோடு, தமிழை உயிரென ஓம்பி, தமிழர் தம் உன்னத வாழ்வுக்காக கள்ளமற்ற மனத்தோடு கவி பாடியவன் பாரதி.

தமிழர்கள் பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் நிலைகண்டு துடிதுடிக்கிறான் அவன்.

பிழைப்புக்காகப் பிறநாடுகள் போன தமிழர்கள் அந்நாடுகளில் நாயினும் கீழாய் நடத்தப்படுதல் கண்டு,

''பற்பல தீவிலும் பரவி இவ்வெளிய
தமிழச்சாதி, தடியுதை யுண்டும்
காலுதையுண்டும் கயிற்றடியுண்டும்
வருந்திடுஞ் செய்தியும் மாய்ந்திடுஞ் செய்தியும்
பெண்டிரை மிலேச்சர் பிரித்திடல் பொறாது
செத்திடுஞ் செய்தியும் பசியாற் சாதலும்
பிணிகளாற் சாதலும் பெருந்தொலையுள்ளதம்
நாட்டினைப் பிரிந்த நலிவினாற் சாதலும்
இஃதெலாம் கேட்டும் எனுளம் அழிந்திலேன்
தெய்வம் மறவார் செயுங்கடன் பிழையார்
ஏதுதான் செயினும் ஏதுதான் வருந்ினும்
இறுதியில் பெருமையும் இன்பமும் பெறுவார்''

என்கிறான்.

மேலுள்ள கவிதை மூலம் பாரதிக்குத் தமிழ்ச்சாதி மீதிருந்த மெய்யன்பு புலப்படுகிறதல்லவா?

இதுகாறும் வண்டமிழர் செய்த தவப்பயனாய் 'வாராது வந்த' மகாகவி பாரதியின் தமிழ்ப்பற்றையும், தமிழர்பால் அவன் கொண்டிருந்த உயிர்ப்பாசத்தையும் கண்ணுற்றீர்கள்.

'அடுத்து பாரதியின் முற்போக்கு முழக்கங்களைக் காண்போம்!

பாரதி சாதி, மதப் பாகுபாட்டிலிருந்து தமிழர்கள்—இந்தியர்கள் விடுபடவேண்டுமென ஆத்ம வீறோடு அற்புதப் பாட்டிசைத்தவன்.

''ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்மம் இத்தேசத்தில் எய்தினராயின்
வேதியராயினும் ஒன்றே—அன்றி
வேறு குலத்தின ராயினும் ஒன்றே''

எனப் பாடுமவன்,

> ''ஆயிரம் உண்டிங்கு ஜாதி—எனில்
> அன்னியர் வந்து புகல் என்ன நீதி?''

என ஆவேச வினாத் தொடுக்கிறான்!

மேலும்,

> ''ஏழையென்றும் அடிமையென்றும்
> எவனும் இல்லை ஜாதியில்,
> இழிவு கொண்ட மனிதரென்பது
> இந்தியாவில் இல்லையே''

எனவும்,

> ''மனிதர் யாரும் ஒரு நிகர்
> சமானமாக வாழ்வமே''

எனவும் அறைகூவல் விடுக்கிறான்.

மேலும்,

> ''சாதிப் பிரிவுகள் சொல்லி—அதில்
> தாழ்வென்றும் மேலென்றும் கொள்வார்''

என்று விம்மும் கவிஞன்,

> ''சாதிக் கொடுமைகள் வேண்டாம்—அன்பு
> தன்னில் செழித்திடும் வையம்''

என்று முரசு கொட்டுகிறான்.

பார்ப்பனச் சமூகத்தில் பிறந்தவன் பாரதி. ஆனால் அந்த இனத்தார் சிலர்பால் விரிந்திருந்த சாதி வெறிச் சிந்தனைகளுக்கெதிராக அணுகுண்டுக் கவிதைகளை யாத்தான் அவன்!

''பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே''

என்றும்,

''முன்னாளில் ஐயரெல்லாம் வேதம் ஓதுவார்
மூன்று மழைபெய்யுமடா மாதம்;
இந்நாளி லேபொய்ம்மைப் பார்ப்பார் இவர்
ஏது செய்தும் காசுபெறப் பார்ப்பார்''

எனவும் சாடுகிறான்.

பிறிதொரு கவிதையில்,

''சாஸ்திரம் வளருது; சாதிகுறையுது
நேத்திரம் திறக்குது நியாயம் தெரியுது''

என்கிறான் அவன்.

கண்ணன் பாட்டில்,

''மேலவர் கீழவரென்றே—வெறும்
வேடத்திற் பிறப்பினில் விதிப்பனவாம்
போலிச் சுவடியை யெல்லாம்—இன்று
பொசுக்கி விட்டாலெவர்க்கும் நன்மை
யுண்டென்பான்''

என்கிறான்.

இப்படிபாரதி பாடிய பின்பும் அப்பழுக்கற்ற ஆத்மாவோடு முற்போக்குத் தன்மையோடு பாட்டிசைத்த தமிழர்குலத் தனிப்பெருங் கவிஞனை எமது தமிழர் குலத்தின் கண் உள்ள துவேஷ பார்வையாளர்கள் ''பாரதி பார்ப்பனக் கவி'' என ஓரங்கட்ட நினைப்பதை மெய்த்தமிழர் என்றென்றும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

சாதிப் பிசாசுக்கெதிராக பாரதி பாடிய எழுச்சிக் கவிதைகளைப் பார்த்தோம்,

இனி பாரதியின் சமத்துவ சிந்தனைக் கவிகளைக் காண்போம்.

எல்லாரும் எல்லாமும் பெற்றுப் பூரண சமத்துவம் இந்தியாவில் பூத்துக் குலுங்க வேண்டுமென வேணவா கொண்டவன் பாரதி.

''முப்பதுகோடி ஜனங்களின் சங்கம்
முழுமைக்கும் பொதுவுடமை
ஒப்பிலாத சமுதாயம்
உலகத் துக்கொரு புதுமை''

என்ற வரிகளே இதனைத் தெளிவாகப் புலப்படுத்தும்.

மேலும்

''இனியொரு விதிசெய்வோம்—அதை
எந்தநாளும் காப்போம்
தனியொருவனுக் குணவிலை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்''

என ஆவேசத்தின் எல்லைக் கோட்டில் நின்று கர்ஜிக்கிறான் கவி.

''எல்லோரும் ஓர்நிறை எல்லோரும் ஓர்விலை
எல்லோரும் இந்நாட்டு மன்னர்—நாம்
எல்லோரும் இந்நாட்டு மன்னர்''

என்ற வரிகளும் கவியின் ஆத்ம தாகத்தை தெளிவாக எமக்குணர்த்துகிறது.

புதியருஷியாவை,

''குடிமக்கள் சொன்னபடி குடிவாழ்வு
மேன்மையுறக் குடிமை நீதி
கடியொன்றி லெழுந்தது பார்; குடியரசென்று
உலகறிய கூறி விட்டார்;
அடிமைத் தளையில்லை யாருமிப்போது
அடிமையில்லை அறிக என்றார்''

என்று பாடி வரவேற்பதன் மூலம் நாம் புதுயுகத்தின் எழுச்சிக் கவிஞனென நிறுவுகிறான் பாரதி.

பிறிதொரு பாடலில்,

''பாருக்குள்ளே சமத்தன்மை—தொடர்
பற்றுஞ் சகோதரத் தன்மை
யாருக்கும் தீமைசெய் யாது—புவி
யெங்கும் விடுதலை செய்யும்''

எனவும்,

''வயிற்றுக்குச் சோறிட வேண்டும்—இங்கு
வாழும் மனிதருக் கெல்லாம்
பயிற்றுப்பல கல்விதந்து—இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்''

எனவும் முரசு கொட்டுகிறான் அவன்.

இப்படியான கவிதைகள் மூலம் நாம் பாரதியின் சமத்துவச் சிந்தனையை பொதுமை விழைவை தெட்டத் தெளிவாக உணர முடிகிறதல்லவா?

பாரதி பெண் விடுதலை விழைந்தும் வீறேர்டு பாட்டிசைத்தான்.

"மாதர் தம்மை இழிவுசெய்யும்
மடமையைக் கொளுத்துவோம்"

என்று கனலேந்துங் கவிபெய்கிறான்.

பெண்குலம் காலத்துக் கொவ்வா கொள்கைகளை உதறித்தள்ளி, அடிமைப் போக்கை சிதறடித்து நவயுகத்துத் தாரகைகளாக ஜொலிக்க வேண்டுமென கருதுகிறான் கவிபாரதி.

மணிக்கவியின் சிந்தையில் பூத்த புதுமைப் பெண்ணை காண்மின்கள்!

"போற்றி போற்றி! ஓர் ஆயிரம் போற்றிநின்
பொன்ன டிக்குப்பல் லாயிரம் போற்றிகாண்
சேற்றி லேபுதிதாக முளைத்த தோர்
செய்ய தாமரைத் தேமலர் போலொளி
தோற்றி நின்றனை பாரத நாட்டிலே"

என்கிறான் அவன்!

மேலும்,

"மாதர்க் குண்டு சுதந்திரம் என்றுநின்
வண்மல லர்த்திரு வாயின் மொழிந்தசொல்
நாதந் தானது நாரதர் வீணையோ?
நம்பிரான் கண்ணன் வேய்ங்குழ லின்பமோ"

என பூரிப்பெய்துகிறான்.

மேலும்,

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கிஇவ் வையம் தழைக்குமாம்"

என தன் மனோவிழைவை 'புதுமைப்பெண்' வாயிலாக மொழிகிறான் பாரதி.

தொடர்ந்து

''இலகு சீருடை நாற்றிசை நாடுகள்
யாவுஞ் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலகு வாணுத லார்த்ங்கள் பாரத
தேசமோங்க உழைத்திடல் வேண்டுமாம்
விலகி வீட்டிலோர் பொந்தில் வாழ்வதை
வீரப்பெண்கள் விரைவில் ஒழிப்பராம்''

என்று முழங்குகிறான்.

பெண்களின் அடிமை நிலை நீங்கி அவர்கள் ஆணுக்குச் சமமாக மேலோங்க வேண்டும் என்பதே பாரதியின் பொற் கனா!

பெண்மை வாழ்கவெனக் கூத்தாடிய அவன்,

''பெண்ண றத்தினை ஆண்மகன் வீரந்தான்
பேணுமாயிற் பிறிதொரு தாழ்வில்லை''

என்கிறான்.

மேலும்,

''உயிரைக் காக்கும் உயிரினைச் சேர்த்திடும்
உயிருனுக் குயிராய் இன்ப மாகிடும்''

என்று விறுடன் விள்ளுகிறான்.

''ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்
றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்

விட்டுக் குள்ளே பெண்ணைப் பூட்டிவைப்
போமென்ற
விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்"

என பெண்களுக்காக விடுதலைக் கும்மி கொட்டுகிறான் புரட்சிக்கவி பாரதி.

## பாரதியின் தேசப்பற்று

பாரத தேசத்தைப் பற்றிய பாரதி கவிதைகளை ஆத்மாவேசத்தில் உருக்கொண்டெழுந்த அக்கினி மலர்கள் எனலாம்.

அடிமை இருளில் வீழ்ந்து கிடந்த பாரததேவியின் நிலைகண்டு பாரதி ரத்தக் கண்ணீர் வடித்தான்.

பாரத விடுதலை வேண்டி அவன் யாத்த கவிதைகளில் காணக்கிடக்கும் உணர்ச்சி வேகமும், மொழிமிடுக்கும் அவன் காலத்தின் பிறஇந்தியக் கவிஞர்களின் கவிதைகளில் இல்லை என்பதே நடுநிலை ஆய்வாளர்களின் முடிவாக வுள்ளது.

பாரத அன்னையின் பழைய மாட்சியை எண்ணி வியக்கும் பாரதி, சுதந்திர வாஞ்சை சுடர்கின்ற ஆத்மாவோடு பாட்டிசைக்கிறான்.

ஒற்றுமை இன்மையால் புனித பாரததேசம் சிதறுண்ட சிந்தனைகளோடு ஒளிமங்கிக் கிடந்தமை கண்ட பாரதி,

"ஒன்று பட்டால் உண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்?"

என்கிறான்.

மேலும்,

''எப்பதம் வாய்த்திடு மேனும் நம்மில்
யாவர்க்கும் அந்தநிலை பொதுவாம்
முப்பது கோடியும் வாழ்வோம்—வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்''

என்று ஆவேசமுற அறைகிறான்.

பாரதி தமது பாரத தேசக் காதலை அதி உன்னத கவிதை நயமோங்க.

''எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே—அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே—இதை
வந்தனை கூறி மனத்தில் இருத்திஎன்
வாயுற வாழ்த்தேனோ—இதை
வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனோ''

என்று பாடுகிறான்.

தொடர்ந்து

''இன்னுயிர் தந்தெமை ஈன்று வளர்த்து அருள்
ஈந்ததும் இந்நாடே—தங்கள்
பொன்னுடல் இன்புற நீர்விளையாடி
போந்ததும் இந்நாடே—இதை

வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனோ?''

என்று உணர்ச்சி ததும்பப் பாடுகிறான்.

பல்வேறு இனங்கள் வாழும் ஒரு நாட்டில் பல்வேறு மொழிகள், கலாசாரங்கள் மலிந்த நாட்டில் அனைத்துப் போக்குகளிலும் உடன்பாடு கொண்டு பாடுவதற்கு வான்போன்ற விரிந்த இதயம் வேண்டும்.

அத்தகைய விரிந்த இதயம் எங்கள் மணிக்கவிஞன் பாரதியிடமிருந்தது!

பாரதி குறுகிய வட்டத்தில் வாழ்ந்து மடிந்த கவிஞன் அல்லன்!

குண்டு சட்டிக்குள் குதிரை யோட்ட முற்பட்ட பிற்போக்குக் கவிஞன் அல்லன்!

ஆதலால்தான் அவன்,

''வெள்ளிப் பனிமலை மீதுலவுவோம் அடி
மேலைக் கடல்முழுதும் கப்பல் விடுவோம்''

எனவும்,

''சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்
சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்''

எனவும்,

''சிந்துநதியின் மிசை நிலவினிலே
சேரநன் னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினிற் பாட்டிசைத்துத்
தோணிக லோட்டிவிளை யாடிவருவோம்''

என்றும்,

"ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்
ஆலைகள்வைப் போம் கல்விச் சாலைகள்
வைப்போம்
ஓயுதல்செய் யோம்தலை சாயுதல் செய்யோம்"

எனவும்,

பாரத ஒருமைப் பாட்டினுக் கனாலிய இன்னுமொரு பாடலில்

"முப்பதுகோடி முகமுடையாள் உயிர்
மொய்ம்புற வொன்றுடையாள்—இவள்
செப்புமொழிபதி னெட்டுடையாள்—எனில்
சிந்தனை ஒன்றுடையாள்"

என்று கம்பீரமாகப் பாடினான்.

பாரதத்தின் கீர்த்தி வியந்த பாரதி,பாரதச் சுதந்திரப் போரின் சிறப்பினைச் செப்புகையில்,

"வீரசுதந்திரம் வேண்டிநின்றார்—பின்னர்
வேறொன்று கொள்வாரோ?"

என்றும்,

"மண்ணிலின் பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை யிழப்பாரோ?"

என்றும் பாடுகிறான்.

"என்றுதணியும் இந்தச் சுதந்திரத்தாகம்
என்றுமடியும் எங்கள் அடிமையின் மோகம்"

என வினவும் பாரதி,

இன்னுமொரு பாடலில்,

> ''விதந்தரு கோடி இன்னல்
> விளைந்தெனை அழித்திட்டாலும்
> சுதந்திரதேவி! நின்னைத்
> தொழுதிடல் மறக்கிலேனே''

என்று கர்ஜிக்கிறான்.

எதிர்காலப் பாரதம் ஜீவனெழுச்சியோடு துலங்குமெனக் கனவு கண்டான் பாரதி!

பாரதியின் நவபாரதக் கனவின் சித்திரமாக,

> ''ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா
> .................................................
> தெளிவு பெற்ற மதியினாய் வா வா வா
> சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா
> எளிமை கண்டு இரங்குவாய் வா வா வா
> ஏறுபோல் நடையினாய் வா வா வா''

என்ற கவிதை அடிகள் விளங்குகிறது.

பாரதம் சுதந்திரம் அடையும் முன்னமேயே நிச்சயம் பாரதத்திற்குச் சுதந்திரம் கிடைக்குமென்ற தொலை நோக்குச் சிந்தனை பாரதியிடம் பரிமளித்தது!

மகாகவி இதனை

> ''ஆடுவோமே—பள்ளுப் பாடுவோமே
> ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று''

என்ற வரிகளாலும்,

> ''எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு—நாம்
> எல்லோரும் சமமென்பது உறுதியாச்சு
> தரணிக்கெல் லாமெடுத்து ஓதுவோமே''

என்று வரிகளாலும் தெளிவாக விளக்குகிறான்.

இப்படியாகப் பலப்பல கவிதைகள் பாரதியின் தேசிய விழைவுக்குச் சான்றாகத் துலங்குகின்றன!

## பாரதியின் ஆன்மிகப் பார்வை

மகாகவி பாரதி ஞான கங்கையில் நீச்சலடித்தவன்.

அவன் தனது வாழ்நாள் எல்லாம் இறையருளை வாஞ்சித்தான்.

தனிப்பெரும் பொருள் ஒன்றின் பல்வகைத்தோற்றமே சகல உயிரினங்களையும், இயற்கையையும் சமைத்துள்ளது என முழுமையாக நம்பினான்.

''அனைத்துமே தெய்வமென்றால்
அல்லல் உண்டோ?''

என்று வினவிய பாரதியின்கவிதைகள் எங்கணுமே அவனது தெய்வ நம்பிக்கையும், தெய்வ விழைவும் விரவிக்கிடக்கிறது!

''பாருக்குள்ளே நல்லநாடு—எங்கள்
பாரதநாடு''

என்று பாடிய அவன்,

''ஞானத்தி லேபர மோனத்திலே''

சிறந்த நாடு தனது தாய்த்திரு நாடாகிய பாரதமே என மார்தட்டுகிறான்!

மேலும்,

''யாகத்தி லேதவ வேகத்திலே—தனி
யோகத்தி லேபல போகத்திலே

ஆகத்தி லேதெய்வ பக்திகொண்டோர்தம்
அருளினி லேஉயர் நாடு...''

என்று பாடி பாரதத்தின் பக்தி வளங்கண்டு பரவசமெய்து கிறான்.

''எங்கள் நாடு'' என்று தலைப்பில் பாடிய பாடலில் கூட

''பன்னரும் உபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொருநூல் இது போலே''

என்று இந்திய ஞானப் பெட்டகமான உபநிடநங்களை விதந்தோதக் காண்கிறோம்!

மேலும் அதே பாடலில்,

''பூரணஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு''

எனப் பூரிக்கிறான்.

'பாரத மாதா' பாடலில்

''ஒன்று பரம்பொருள் நாம் அதன் மக்கள்
உலகின்பக் கேணி என்றே—மிக
நன்று பல் வேதம் வரைந்தகை—பாரத
நாயகி தன்திருக் கை''

எனப் பெருமித முறுகிறான்.

மேலும் அதே பாடலில்

''போர்க்களத் தேபர ஞான மெய்க்கீதை
புகன்ற தெவருடைய வாய்?''...

எனக்கேட்டு வியக்கிறான்.

'எங்கள் தாய்' என்று பாரத தேவியை வருணிக்கும் பாரதி,

''நாவினில் வேதமுடையாள்—தனை
மேவினர்க் கின்னருள் செய்பவள்''

என்று புகழ்கிறான்.

தாய் பராசக்தியே பாரததேவி எனும் நோக்கில் பார்த்தவன் பாரதி.

''பாரத மாதா திருபள்ளியெழுச்சி'' பாடலில் இதனை,

''சுருதிகள் பயந்தனை: சாஸ்திரம் கோடி
சொல்லரு மாண்பின ஈன்றனை யம்மே''

என்ற வரிகளில் உணர்த்துகிறான் அவன்.

பாரததேவி பராசக்தியாக பாரதிக்குத் தென்படுவது போல் தமிழும், தமிழ் நாடும் கூட அன்னான் பார்வையில் தெய்வாம்சம் நிரம்பியே தெரிகிறது.

''செந்தமிழ் நாடு'' எனுந் தலைப்பில் அவன் பாடிய பாடலில்,

''வேதம் நிறைந்த தமிழ்நாடு''

என்ற வரிகளும்,

'தமிழ்த்தாய்' தன் வரலாறு கூறும் பாட்டில்,

''ஆதிசிவன் பெற்று விட்டான்''

என்ற வரிகளும் இதனைத் தெளிவுறக் கூறுகின்றன.

'தமிழ்ச்சாதி' என்ற பாடலில்,

தமிழர்கள் எத்துணை இடர்பட நேரினும் அவர்கள்,

''தெய்வம் மறவார்''

என்றும் அதனால்,

''இறுதியில் இன்பமும் பெருமையும் பெறுவார்!''
எனவும் உறுதியாகக் கூறுகிறான்.

பாரதியின் பல்வேறு வகைப்பட்டக் கவிதைகளில் தெய்வ மணமே நிறைந்துள்ளது என்பது உண்மை!

'சுதந்திரம் பெற்று விட்ட' தீர்க்கதரிசன நோக்கில் அவன் பாடிய

'சுதந்திரப் பள்ளு' பாடலில் இதனை,

''பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்—பரி
பூரணனுக் கேயடிமை செய்து வாழ்வோம்''

என்று ஆணித்தரமாக இயம்புகிறான் கவிஞன்!

பாரதி 'பக்தி' என்ற தலைப்பில் பாடிய பாடல்களில்,

''பக்தியினாலே—தெய்வ—பக்தியினாலே
பக்தியினாலே—இந்தப்
பாரினி லெய்திடும் மேன்மைகள் கேளடி''

என்றும்

..........................................................................

''ஈசனைப் போற்றி—இன்பம்
யாவையு முண்டு புகழ்கொண்டு வாழ்குவம்''

என்றும் பாடுகிறான்.

தனது மனத்தைப் பெண்ணாக உருவகித்து மணிக்கவி பாரதி எழுதிய பாடலிலும்,

..........................................................................

''உன் விழிப்படாமலே என் விழிப்பட்ட
சிவமெனும் பொருளைத் தினமும் போற்றி
உன்றனுக் கின்பம் ஓங்கிடச் செய்வேன்''

எனப் பாடுகிறான்.

பாரதியின் புரட்சிச் சிந்தனைகளை யாம் உள்ளாழ்ந்து பார்த்தால் அவை வெறுமனே உலோகயுத எண்ணங்களி லிருந்து உதித்தவை அல்ல; அவை இறை விசுவாசத்தின் பின்னணியில் பிறந்தவை என்பது தெளிவாகும்!

ஆம்!

பாரதியின் புரட்சிச் சிந்தனைகள் வேதஞானத் தெளி வில் பிறந்தவை!

உபநிடதங்களின் உட்பொருளை நுணுகிக் கற்றுத் தெளிந்தமையால் என்ஞான்றும் மெய்ம்மையாய் நிற்கும் மகாசக்தி தன்னுள் ஆனந்த சுடர் விரிக்கும் அற்புதத்தை உணர்ந்து கொள்கிறான்!

'சங்கு' என்ற தலைப்பிலே பாரதி பாடிய பாடலில்

''செத்தபிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திட லாமென்றே எண்ணியிருப்பார்
பித்தமனிதர், அவர் வெறுஞ் சாஸ்திரம்
பேயுரை யாமென்றிங் கூதடா சங்கம்''

என்று பாடி,

ஞானத் தெளிவு எய்தாமல்—தன்னுள் ஜோதிவிரிக்கும் மெய்ப்பொருளை அறியாமல் வெறும் சமய சடங்குகளை கட்டியழுவோரை ஏளனம் செய்கிறான்!

''மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே''

என்று இறையுண்மை உணர்ந்த மாணிக்கவாசகர் போல் பாரதியும் தெளிவு பெற்றவன்.

ஆதலால்தான்—

''இத்தரை மீதினி லேயிந்த நாளில்
இப்பொழு தேமுக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவ ராமென்றிங் கூதடா சங்கம்''

என்று பாடுகிறான்.

மெய்யறிவு நிலையே இறைவனுறையும் நிலை என்ற பக்குவங் கொண்ட பாரதி, 'அறிவே தெய்வம்' என்ற தலைப்பில்,

''ஆயிரந் தெய்வங்கள் உண்டென்று தேடி
அலையும் அறிவிலிகாள்—பல்
லாயிரம் வேதம் அறிவொன்றே தெய்வமுண்
டாமெனல் கேளீரோ?''

என்று வேதத்தைச் சாட்சிக்கழைத்துச் சத்பொருளுக்கு விளக்கம் கொடுக்கிறான்!

பாரதி புதிய ஆத்திசூடியில்,

''தெய்வம் நீ என்று உணர்!''

என்று பாடினான்,

'புதுமைப் பெண்' பாடலிலும், தான் படைத்த புதுமைப்பெண்ணை,

''வேதம் பொன்னுருக் கன்னிகை யாகியே
மேன்மை செய்தெமைக் காத்திடச் சொல்வதோ''

என்றும்

''பூணு நல்லறத் தோடிங்குப் பெண்ணுருப்
போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்''

என்றும் மொழிகிறான்.

புதுமைப் பெண்ணானவள்,

மதத்திலே மண்டிக் கிடக்கும் வெற்றுச் சடங்குகளைக் களையெடுத்து அதன் உட்பொருளை உணர்ந்தவள் என்பதனை தெளிவுபடுத்தும் முகமாக,

''மூத்த பொய்ம்மைகள் யாவும் அழிப்பாராம்
மூடக்கட்டுகள் யாவுந் தகர்ப்பாராம்
காத்து மானிடர் செய்கை அனைத்தையும்
கடவு ளர்க்கினி தாகச் சமைப்பாராம்''

என்று பாடுகிறான்,

'புதிய ருஷியா' மலர்ந்தமை கண்டு ஆனந்தப் பரவச மெய்திய பாரதி அது 'யாதுமாகி நின்ற காளியின் அருளே' என்று உணர்ந்தவனாக,

"மாகாளி பராசக்தி உருசியநாட்
டினிற் கடைக்கண் வைத்தாள் அங்கே
ஆகாவென் றெழுந்ததுபார் யுகப் புரட்சி"

என்கிறான்.

அத்வைத நிலை தெளிந்த பாரதி, தானும் 'அனைத்து மான அதுவும்' ஒன்றென்றும் மெய்யறிவு வாய்க்கப்பெற்ற புரட்சி பான்மையோடு 'ஜயபேரிகை' பாடலில்,

"காக்கை குருவி எங்கள் ஜாதி—நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்
நோக்குந் திசையெலாம் நாமன்றிவேறில்லை
நோக்க நோக்கக் களியாட்டம்"

எனப் பாடுகிறான்.

பாரதி வைதிக கட்டுகளில் ஆழ்ந்து கிடந்த ஓர் சாமான்ய இந்து அல்லன்.

அனைத்துமே ஒரு தெய்வம் என்னும் பேருண்மை அறிந்தவன்.

ஆதலால்தான் அவனால் அல்லாவின் கருணை பற்றி பாட முடிந்தது. கிறிஸ்து பெருமானின் கீர்த்தியைப் பற்றி எழுத முடிந்தது.

மகாகவி பாரதியின் கவிதைக் கருவூலங்களான கண்ணன் பாட்டும், பாஞ்சாலி சபதமும், குயில் பாட்டும்,

அவன் நவமுடந்திட்டிய வசன கவிதைகளும், இறைவாஞ்சையோடுதான் கொடிகட்டிப் பறக்கிறது.

''பாட்டினிலே சொல்வதும் அவள் சொல்லாகும்''

என்றும்,

''செய்யுங் கவிதை பராசக்தி யாலே
செய்யப்படுங் காண்''

என்றும் ஆழமான ஆன்மிக உணர்வுக் கவிஞனாவே பாரதி மின்னுகிறான்.

தமிழர்களைத் தட்டி எழுப்பிய எழுச்சிக் கவிதைகள் வழங்கிய பாரதி,

தமிழ்ச்சுவையில் திளைத்து

''யாமறிந்த மொழிகளில் தமிழ்போல்
இனிதாவது எங்கும் காணோம்''

என முழங்கிய பாரதி,

பெண் விடுதலைக்காக நவசிந்தனைச் சுடர் கொளுத்திய பாரதி,

தமது மிகப்பல கவிதைகளில் இறையருளை விசுவாசித்தவனாக தன்னை இனங்காட்டுகிறான்.

பாரதி கவிதைகளில் மிக மேலோங்கி நிற்கும் அம்சங்கள் ஆன்மிகப்பற்றும், தேசப்பற்றும் தான் என்பதில் நடுநிலை ஆய்வாளர்களுக்கு இருவேறு கருத்துகள் இருக்க இயலாது!

# மகாகவி பாரதிதாசன்

''எங்கெங்கு காணினும் சக்தியடா''

என்று மகாகவி பாரதி முன்னால் பாடி, பாரதியால் உயர்ந்த முறையிலே மறுமலர்ச்சிக் கவியுலகிற்கு அடையாளங் காட்டப்பட்ட மகாகவியே பாரதிதாசன்.

பாரதியின் தோழமை கிட்டுவதற்கு முன்னர் பண்டிதத் தமிழிலே கரடுமுரடான கவிதைகள் எழுதிக் கொண்டிருந்த கனகசுப்புரத்தினம் பாரதி தரிசனம் பெற்றமையால் பாரதியின் நவகவி நறுந்தேனை மாந்திடும் வாய்ப்புப் பெற்றமையால்,

சுவை புதிதாய், பொருள் புதிதாய்—வளம் புதிதாய், சொல் புதிதாய் நவகவிதைகளைப் பாரதி போல் பாடும் திறன் ஏற்பட்டு தமது கவிதா நாயகனாக பாரதியையே ஆத்மார்த்தமாக் ஏற்றுக் கொண்டு பாரதிமேல் தேவதா விசுவாசங் கொண்டு தனது பெயரையே பாரதிதாசன் என மாற்றிக் கொண்டார்.

பாரதியார் பைந்தமிழ் மக்கள் விழிப்படைய ஆவேசக் கவிதைகளை அக்கினி மழையாய் பொழிந்தது போலவே—

'தேமதுரத் தமிழோசை உலகமெங்கும் பரவிடவேணவா கொண்டு செயற்பட்டதுபோலவே மகாகவி பாரதிதாசனும் செயற்பட்டார்.

பாரதியார் தமிழர் மறுமலர்ச்சி, தமிழ்மேம்பாடு என்ற எல்லைகளில் தனது சுவடுகளைப் பதித்து விட்டு—

ஆன்மிகச் சிந்தனைகள், தேசிய சிந்தனைகள் என்ற விரிந்த எல்லைகளிலே தமது கவிதா கீர்த்தியை நிறுவினான்.

அவன் தாசனோ பல எல்லைகளில் நின்று கவிதைகள் பாடினாலும் "தமிழே உயிர், தமிழர் மேம்பாடே" தனது வாழ்வின் இலட்சியம், என வகுத்துக் கொண்டு அதற்காகவே இறுதிவரை வாழ்ந்தான்.

இந்த இலட்சியப் பிடிப்பால் பெரியார் ஈ.வே.ராவின் திராவிட எழுச்சிச் சிந்தனைகளை—சீர்திருத்த வித்துகளை தமது கவிப்பொருளாக்கி தமிழர் குலம் காலமெல்லாம் போற்ற வல்ல மறுமலர்ச்சிக் கவிதைகளை மிகுதியாக எழுதினான்.

மகாகவி பாரதிதாசன் தனது பாணியில் கவிபாடும் ஒரு கவிஞர் கூட்டத்தையே உருவாக்கினான்.

பாரதிதாசன் கவிதைகளில் தமிழுணர்ச்சியும், சாதி எதிர்ப்புச் சிந்தனைகளும், பெண் விடுதலை விழைவும், சமத்துவச் சிந்தனைகளும் மின்னுகின்றன.

## தமிழ் உள்ளம்

அமுதத் தமிழின் இன்பத்தில் தன்னை மறந்த கவிஞன்,

"நனிபசு பொழியும் பாலும்—தென்னை
நல்கிய குளிரின் நீரும்
இனிய என்பேன் எனினும்—தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்!"

எனவும்,

''குழவிகள் மழலைப் பேச்சும்,—பெண்கள்
கொஞ்சிடும் இதழின் வாய்ப்பும்
விழைகுவ னேனும் தமிழும்—நானும்
மெய்யாய் உடலுயிர் கண்டீர்!''
(தமிழின் இனிமை—பாடல்)

என்றும் ஏற்றிப் போற்றுகிறான்!

புதுவைக் கவிஞன் தமிழைப் பற்றிப் பாடும் போது,

''தமிழுக்கு அமுதென்றுபேர்—அந்தத்
தமிழ் இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்!

.....................................

தமிழுக்கு மணமென்று பேர்—இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்!

.....................................

தமிழ் எங்கள் பிறவிக்குத்தாய்—இன்பத்
தமிழ் எங்கள் வலமிக்க உளமுற்ற தீ''
(இன்பத் தமிழ்—கவிதைகள்)

என்று தமிழை அற்புதமாக போற்றி செய்து பாடுகிறான்.

தமிழின் இனிமையில் திளைத்த பாரதிதாசன்

மேலும்,

.....................................

''என்றும் தமிழ் வளர்க—கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக!

இன்பம் எனப்படுதல்—தமிழ்
இன்பம் எனத்தமிழ் நாட்டினர் எண்ணுக!
(தமிழ் உணர்வுப் பாடல்)

என்று வேண்டுகிறான்.

மகாகவி பாரதிதாசன் 'எங்கள் தமிழ், என்று பாடிய கவிதையில்,

''தமிழ் என்னில் எம்முயிர்ப் பொருளாம்-இன்பத்
தமிழ் குன்றுமேல் தமிழ் நாடெங்கும் இருளாம்''

என்கிறான்.

தமிழ் தழைத்தோங்க,

''உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூற்கள்
ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
கலசமென எவ்விடத்தும் பாய்ச்சிட வேண்டும்''

என வேண்டுகிறான்.

தமிழே தாரணி எங்கணும் புகழ்க்கொடி நாட்ட வேண்டுமென மனமார விழைந்தான் பாரதிதாசன்.

கவிஞனின் அவாவினை

''தாயெழிற் றமிழை என்றன்
தமிழரின் மொழியிற் காண
இப்புவி அவாவிற் றென்ற
தோயுறும் மதுவின் ஆறு
தொடர்ந் தென்றன் செவியில் வந்து

பாயுநாள் எந்த நாளோ
ஆரிதைப் பகர்வார் இங்கே''
(எந்தநாளோ—கவிதை)

என்ற வரிகளால் நாம் உணரலாம்.

அடுத்து—

தண்டமிழர் போர்த்தொழில் பயின்று உலகேநடுங்கும் வீரங்கொள்ள வேண்டுமெனக் கவிஞன் கூறுகிறான்!

இதனை—

''அணிபெறத் தமிழர் கூட்டம்
போர்த்தொழில் பயில்வதெண்ணிப்
புவியெலாம் நடுங்குதென்ற
வார்த்தையைக் கேட்டு நெஞ்சு
மகிழ்ந்து கூத்தாடல் என்றோ''
(எந்நாளோ—கவிதை)

என்று விழைகிறான்.

மேலும்,

''வெள்ளம்போல் தமிழர் கூட்டம்
வீரங்கொள் கூட்டம் அன்னார்
உள்ளத்தால் ஒருவரே மற்
றுடலினால் பலராய்க் காண்பார்
கள்ளத்தால் நெருங் கொணாதே;
எனவையம் கலங்கக் கண்டு
துள்ளும்நாள் எந்நாள் உள்ளம்
சொக்கும் நாள் எந்தநாளோ''
(எந்தநாளோ—கவிதை)

என்கிறான் கவிஞன்,

தமிழர்களில் ஒருசாரார் பாரதிதாசனின் இதய விழைலவ செயற்படுத்தி வருதலைக்காணும் வாய்ப்பினை இன்று வாழ்ந்திருப்பின் நிச்சயம் கண்டு பரவச முற்றிருப்பான்!

மாத்தமிழர் வீரம் பொங்கிய நிலையில் ஒன்றுபட்டு தமது, இனம், மொழி காத்திட போரிட வேண்டுமென்ற ஆறா ஆத்ம தாகம் மிக்கவன் புதுவை தந்த மகாகவிஞன்.

இதலை

''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு
எங்கள் பகைவர் எங்கோ மறைந்தார்
இங்குள்ள தமிழர்கள் ஒன்றாதல் கண்டே''

என்ற கவிதையால் எடுத்தியம்புகிறான்.

அடுத்து,

''திங்களொடும், செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும், உடுக்களோடும்
மங்குல், கடல் இவற்றோடும் பிறந்த தமிழுடன்
பிறந்தோம்
நாங்கள் ஆண்மைச்
சிங்கத்தின் கூட்டமென்றும் சிறியோர்க்கு
ஞாபகம்செய் முழங்கு சங்கே!
சிங்களஞ்சேர் தென்னாட்டு மக்கள்
தீராதி தீரரென் றூது சங்கே!
பொங்கும் தமிழர்க்கின்னல் விளைந்தால்
சங்காரம் நிஜமெனச் சங்கே முழங்கு!
வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும்
தோளெங்கள் வெற்றித்தோள்கள்

கங்கையைப்போல் காவிரிபோல் கருத்துக்கள்
ஊறுமுள்ளம் எங்கள் உள்ளம்
வெங்குருதி தனிற்கமழ்ந்து வீரஞ்செய்கின்றதமிழ்
எங்கள் மூச்சாம்
(சங்கநாதம்—கவிதை)

என்று 'தமிழே வாழ்வு; தமிழர் மேம்பாடே உயிர்' என வாழ்ந்த மகாகவி பாரதிதாசன் சிம்ம கர்ஜனை செய்கிறான்!

பாரதிதாசன் இலங்கை வேந்தன் இராவணனை மாவீரனாய் தெளிந்த நிலையில்

"தென்றிசையைப் பார்க்கிறேன்; என்சொல்வேன்
என்றன்
சிந்தையெலாம் தோள்களெலாம் பூரிக்குதடா!
அன்றந்த லங்கையினை ஆண்ட மாத்தமிழன்
ஐயிரண்டு திசைமுகத்தும் தன்புகழை
வைத்தோன்!"

என்று பாடி,

"என்தமிழர் மூதாதை என்தமிழர் பெருமான்"

என் அடிமனத்திலிருந்து கிளர்ந்தெழுந்த மெய்யுணர்வை மேன்மைத் தமிழாகப் பெய்கிறான்!

தொடர்ந்து எந்தமிழர் நாடு உய்ய வேண்டுவன யாவை? என்று வீறோடு,

"வீழ்ச்சியுறு தமிழகத்தில் எழுச்சி வேண்டும்
விசை ஒடிந்த தேகத்தில் வலிமை வேண்டும்
சூழ்ச்சிதனை வஞ்சகத்தைப் பொறாமை
தன்னைத்

தொகையாக எதிர்நிறுத்தித் தூள் தூளாக்கும்
காழ்ச்சிந்தை மறச்செயல்கள் மிகவும் வேண்டும்
கடல்போலச் செந்தமிழைப் பெருக்க வேண்டும்''
(வீரத்தமிழன்—கவிதை)

என்று பாடுகிறான்.

வலிமைமிக்கோர் எளியோரை வருத்தி அடக்கி ஆளும் நிலை பல நாடுகளின் வரலாறுகளில் நேர்ந்து வந்துள்ளன; வருகின்றன.

இத்தகைய கொடிய ஆதிக்க சக்திகள் தமிழர்களை பிற்போக்கு நிலைக்குத் தள்ளி அடிமைக்கோலம் பூண வைத்துவிட்டது என மணித்தமிழரின் மகாகவிஞன் பாரதி தாசன் கொதித்தெழுகிறான்!

தமது கோபத்தின் எதிரொலியாக அவன்,

''வலியோர்சிலர் எளியோர் தமை
வதையே புரிகுவதா
மகராசர்கள் உலகாளுதல்
நிலையாம் எனும் நினைவா
உலகாள உனதுதாய்மிக
உயிர்வாதை யடைகிறாள்;
உதவாதினி ஒருதாமதம்
உடனே விழிதமிழா!''

என மொழிகிறான்.

தொடர்ந்து—

அடிமை நிலை பூண்ட தமிழன் வாள், பூமி எங்கணும் ஆண்மைத் திறனால் ஆண்டிட வேண்டுமெனும் அவாவினால்,

''அலைமாகடல் நிலம், வானிலுன்
அணி மாளிகை ரதமே
அவை ஏறிடும் வித மேயுன
ததிகாரம் நிறுவுவாய்!
கொலை வாளினை எடடா மிகு
கொடியோர் செயல் அறவே
குகைவாழ் ஒருபுலியே உயர்
குணமேவிய தமிழா''

(வாளினை எடடா—கவிதை)

என்று ஆண்மைக் கவிஞன் அறைகிறான்!

அவனியில் அடிநாளிலே வாழ்ந்தது தனிப்பெரும் தமிழினமே என்ற பேருண்மை தெளிந்த புதுவையின் பூகம்பக் கவிஞன்,

''அவைவாம் உலகின் மக்களை யெல்லாம்
அடிநாள் ஈன்ற அன்னை தந்தை
தமிழர்கள் கண்டாய் அறிவையும் ஊட்டிச்
சாகாத் தலைமுறை ஆக்கிய நாடு''

(திராவிட நாட்டுப்பண்)

என்று பாடுகிறான்.

தமிழன் என்றும், திராவிடன் என்றும் சொல்வதை தலையாய இன்பமாகக் கருதியவன் மகாகவிபாரதிதாசன்.

இதனை—

''இனப்பெயர்ஏன் என்று பிறன்எனைக்கேட்டால்
மனத்தில் எனக்குச் சொல்லொணா மகிழ்ச்சியாம்
''நான்தான் திராவிடன்'' என்று நவில்கையில்
தேன்தான் நாவெல்லாம் வான்தான் என்புகழ்''

என்கிறான் அவன். (திராவிட நாட்டுப்பண்)

பிறந்த மரபில் வந்த தமிழர்தம் தாழ்வுற்ற நிலை கவிஞனை கடுங்கோபமுறச் செய்கிறது!

ஆவேசமுடன்,

> ''செந்தமிழும், செந்தமிழ் நாட்டைச் சிறைமீட்க
> நந்தமிழர் உள்ளத்தில், வையம் நடுநடுங்கும்
> வெந்தணல் ஒன்று விரைந்து வளர்ந்ததென்று
> குத்திக் குரலெடுத்துக் கூவாய் கருங்குயிலே''

*(கூவாய் கருங்குயிலே—பாடல்)*

என்று பாடுகிறான்.

மேலும்,

அடங்கிக் கிடக்கும் தமிழர்கள் புதிய வீறு பெற்று பொலிதல் எங்ஙனம்? என்பதனை ஓர் இளந் தமிழனுக்கு அறிவுறுத்தும் வண்ணம்,

> ''தெரிவன யாவும் உயர்தமி ழாக
> வருவது கோரி உழையாயோ
> செந்தமிழ் நாடு திகழ்வது பாரீர்
> எனஎனை நீயும் அழையாயோ!
> ஒருதமி ழேநம துயிரென யாரும்
> உணர்வுறு மாறு புரியாயோ
> உயர்தமிழ் நாடு விடுதலை வாழ்வு
> பெறஉன தாசை பெருகாதோ?''

*(விடுதலை ஆசை-பாடல்)*

என வேணவாவோடு பாடுகிறான்.

பாரதிதாசனின் தமிழ்நெஞ்சம் பாதென இக்கட்டுரை யில் சுட்டினேன்.

மகாகவிஞரின் தமிழ் மொழியும், தமிழின நலநோக்கும் யாதெனை அறிந்த நாம் தொடர்ந்து அவரின் எழுச்சி முரசு யாதெனத் தெளிவோம்.

## எழுச்சி முரசு

இந்துமதம் சார்பான புராணங்களும், இதிகாசங்களும் அவை காட்டும் கடவுள் கோட்பாடுகளும், அவற்றைப் போதிப்போருமே தமிழர்களைப் பின்தள்ளிச் சாதிப் பிரிவினைகள் தோன்றக் காரணமாக இருந்தார்கள் என ஆணித்தரமாக தமது பாடல்கள் மூலம் சொல்கிறான் பாரதிதாசன்.

"துயருறத் தாழ்ந்தவர் உள்ளார்—என்று
சொல்லிடுந் தீயரை தூவென் றுமிழ்வாய்"

(சஞ்சீவி பர்வதத்தின் சாரல் பாடல்)

என்கிறான்.

மேலும்,

"பேதம் வளர்க்கப் பெரும்பெரும்பு ராணங்கள்
சாதிச்சண் டைவளர்க்கத் தக்க இதிகாசங்கள்
கட்டிச் சமூகத்தின் கண்ணை வித்துத் தாமுண்ண
கொட்டி அளக்கும் குருக்கள் கணக்கற்றோர்"

(சஞ்சீவிப் பர்வதத்தின் சாரல் பாடல்)

என ஆவேசமாகப் பாடுகிறான்.

அடுத்து,

''நம்பத் தகாதவெலாம் நம்பவைத்துத் தாங்கள் நலம்
சம்பா திக்கின்ற சரித்திரக் காரர்களால்
நாடு நலிகுவதை நான்இன்று கண்டுணர்ந்தேன்''
(சஞ்சீவி பர்வதத்தின் சாரல்—பாடல்)

என்கிறான்.

''மூடப் பழக்கம், முடிவற்ற கண்ணுறக்கம்
ஓடுவதென்றோ? உயர்வதென்றோ நானறியேன்''
(சஞ்சீவி பர்வதத்தின் சாரல்—பாடல்)

என ஏங்குகிறான் கவி.

''காப்பார் கடவுள்உமை கட்டையில்நீர் போகுமட்டும்
வேர்ப்பீர், உழைப்பீர் எனஉரைக்கும் வீணருக்கும்,
மானிடரின் தோளின் மகத்துவத்தைக் காட்டவந்த
தேனின் பெருக்கே, என்செந்தமிழே கண்ணுறங்கு''
(ஆண் குழந்தை தாலாட்டு பாடல்)

''எல்லாம் கடவுள்செயல் என்று துடைநடுங்கும்
பொல்லாங்கு தீர்த்துப் புதுமை செயவந்தவளே''
(பெண் குழந்தை தாலாட்டுப் பாடல்)

என்றெல்லாம் எழுதி மழலைச் செல்வங்களுக்கும் தனது சிந்தனைகளை வலியுறுத்துகிறான் கவிஞன்.

மதவாதக் கூட்டத்தை நோக்கி,

''மதத்தின் தலைவீர்?—இந்த
மண்ணை வளைத்துள்ள அண்ணாத்தைமாரே
குதர்க்கம் விளைத்தே—பெருங்
கொள்ளை யடித்திட்ட கோடீசுரர்காள்!''
(புதிய உலகம்—கவிதை)

என கவிதைக்கணை தொடுக்கிறான் கவிஞன்!

இளைஞர்களை நோக்கி,

''காசை பிடுங்கிடு தற்கே—பலர்
கடவுளென்பார்! இருகாதையும் மூடு
கூசி நடுங்கிடு தம்பி!—கெட்ட
கோயிலென் றால்ஒரு காதத்திலோடு''

(வாழ்வில் உயர்வுகொள்—கவிதை)

என்று இயம்புகிறான் மகாகவி!

கடவுள் மறுப்புணர்வை,

''காணு மானிடரைக் கனம்செயல் முறையா?
கடவுள் எனும் மயக்கில் கவிழ்ப்பது முறையா?
மாணுறும் தன்னம்பிக்கை வளர்ப்பது நலமா?
வயப்படும் பக்தியினால் பயப்படல் நலமா?''

(ஆய்ந்துபார்!—கவிதை)

என்று திராவகத்தமிழ் தீட்டுகிறான் கவிஞன்.

வேதத்தை ஒப்பாத காரணத்தால் தமிழர்கள்சேரிக்கு வந்தார்கள் என்பதனை,

''அழிவேதம் ஒப்பாதாரை
அரக்கரென் றேசொலிப்
பழிபோட்டுத் தலைவாங்கினார்—சகியே
பழிபோட்டுத் தலைவாங்கினார்''
''ஆரியர்தமை ஒப்பா
ஆதித் திராவிடரைச்
சேரியில் வைத்தாரடி—சகியே
சேரியில் வைத்தாரடி!''

''சேரிப் பறையர் என்றும்
தீண்டாதார் என்றும் சொல்லும்
வீரர்நம் உற்றாரடி—சகியே
வீரர்நம் உற்றாரடி!

வெஞ்சமர் வீரர் தம்மை
வெல்லாமற் புறந்தள்ளப்
பஞ்சமர் என்றாரடி—சகியே
வீரர்நம் உற்றாரடி!'' (சமத்துவப் பாட்டு)

என்று நெக்குருகி எழுதுகிறான் புதுவை தந்த மகாகவி.

பிறிதொரு பாடலில்,

''சாதிகள் வீழ்ந்திட வேண்டும் பெண்ணே
தமிழினமோ வாழ்ந்திட வேண்டும்''
(தமிழ் மகளே வேண்டும்—பாடல்)

எனச் சொல்கிறான்.

இப்படியாக தமிழினம் இந்து மதம் ஏற்படுத்திய சாதிப் பிரிவுகளால் தாழ்வுற்றது பற்றியும், தமிழினம் ஆர்த்தெழுந்து போராடி மானமோங்க மகத்தான வாழ்வு காண வேண்டுமென்றும் உணர்ச்சி பீறிடும் கவிதைகளைப் பாரதிதாசன் கனன்றெழுந்து பாடியுள்ளான்.

## சமத்துவ நோக்கு

'தொழிலாளர்கள்பால்' மிகுந்த பற்றுடையவன் புதுவைக்கவிஞன்.

சாமான்யர்கள் மேலோங்கிச் சமத்துவ உலகை படைக்க வேண்டுமென விழைந்தது கவிஞன் நெஞ்சம்,

....................................

தொழிலறிந்த ஏழையரை எவ்வாறு செல்வர் பலர் உறிஞ்சி வாழ்கிறார்கள் என்பதனை,

''தொழிலறிந்த ஏழை மக்கள்
தொழில் புரிந்து செல்வர் பால்
அழிவிலாதமு தல் கொடுக்க
அம்முதற் பணத்தினால்
பழிமிகுந்த அரசமைத்துப்
படைகள் தம்மை ஏவியே
தொழில் புரிந்த ஏழை மக்கள்
சோற்றிலே மண் போடுவார்''

என்று பாடும் கவிஞன்,

தொழிலாளர்கள் தொண்டு செய்ய வேண்டுமென்பது கடவுள் ஆணை என்ற கூற்றை கடிந்துரைக்கும் வண்ணம்,

''நடவு செய்த தோழர் கூலி
நாலணாவை ஏற்பதும்
உடலுழைப்பி லாத செல்வர்
உலகை ஆண் டுலாவலும்
கடவுளாணை என்றுரைத்த
கயவர் கூட்ட மீதிலே
கடவுள் என்ற கட்டறுத்துத்
தொழிலுலாரை ஏவுவோம்!''

(புதிய உலகம்—கவிதை)

என ஆவேசமாகக் கூறுகிறான்;

'ஏழைதொழிலாளர்உலகு' பொங்கி எழுந்தால் அவர்களைச் சுரண்டி பணம் பிடுங்கும் செல்வர் நிலை தவிடுபொடியாகிவிடும் என்பதனை உணர்த்தும் முகமாகக் கவிஞன்,

.................................

ஓடப்ப ராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்ப ராகி விட்டால் ஓர் நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப்பா நீ!

(உலகப்பன் பாட்டு)

என்று உணர்ச்சிப் பொங்கக் கூறுகிறான்.

தொழிலாளர்களின் கடின உழைப்பே உலகமுன்னேற்றம்; ஆனால் அவர்தம் பணிக்கேற்ற பயன் கிடைக்காது, தொழிலாளர் வாடும் நிலைகண்டு அவர்கள் விழிப்புற வேண்டுமென விழைந்து கவிஞன்,

''சித்திரச் சோலைகளே! உமை நன்கு
திருத்த இப்பாரினிலே—முன்னர்
எத்தனை தோழர்கள் ரத்தம் சொரிந்தன
ரோ! உங்கள் வேரினிலே

..............................

ஆர்த்திடும் யந்திரக் கூட்டங்களே—உங்கள்
ஆதி அந்தம் சொல்லவோ;—நீங்கள்
ஊர் தொழிலாளர்கள் உழைத்த உழைப்பில்
உதித்தது மெய் அல்லவோ?
கீர்த்திகொள் போகப் பொருட் புவியே!
உன்றன்

கீழிருக்கும் கடைக்கால்—எங்கள்
சீர்த்தொழி லாளர் உழைத்த உடம்பிற்
சிதைந்த நரம்புகள், தோல்!''

என வேகமுடன் கூறுகிறான்!

தொழிலாள சக்தியின் உதவியுடன் புதிய உலகு செய்ய அவாவி நிற்கிறான் மகாகவி பாரதிதாசன்.

''புதியதோர் உலகம் செய்வோம்—கெட்ட
போரிடும் உலகத்தை வேரோடுசாய்ப்போம்''

என்கிற கவிஞன்,

''பொது உடைமைக் கொள்கை திசையெட்டும்
சேர்ப்போம்
புனிதமோ டதை எங்கள் உயிரெனக்
காப்போம்
இதயமெலாம் அன்பு நதியினில் நனைப்போம
'இது எனதெ'ன்னுமோர் கொடுமையைத்
தவிர்ப்போம்''
(புதியதோர் உலகு செய்வோம்—கவிதை)

என மிகச்சிறப்பாகப் பாடுகிறான்.

## மாதர் முன்னேற்றச் சிந்தனைகள்!

ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டுமென மகாகவிபாரதி விழைந்து, விறுடைய பாக்கள் படைத்ததைப் போன்றே மகாகவி பாரதிதாசனும் லு பாங்கான பாக்கள் வடித்துள்ளான்!

பெண்கள் முன்னேற்றம் பற்றி ஆங்கில இலக்கிய மேதை பெர்னாட்ஷோ கூறிய கருத்தொன்றும் புதுவைக் கவிஞனை ஈர்க்கிறது.

இதனை,

''கல்வியில்லை உரிமை இல்லை பெண்களுக்குக்
கடைத்தேற, வழியின்றி விழிக்கின்றார்கள்
புல்லென்றே நினைக்கின்றீர் மனைவிமாரைப்
புருஷர்களின் உபயோகம் பெரிதென்கின்றீர்
வல்லவன்பே ரறிஞன்ஷா வார்த்தை கேட்பீர்
மனோபாவம் இனியேனும் திருந்த வேண்டும்
இல்லையெனில் எதுசெயலாம்! பெண்ஆண் என்ற
இரண்டுருளை யால்நடக்கும் இன்ப வாழ்க்கை!

(பெண்ணுலகு—கவிதை)

என்று பாடுகிறான்.

நமது நாட்டில் பல கன்னிப்பெண்களின் வாழ்க்கை அதிகார எண்ணங்கொண்ட பெற்றோர்களாலேயே பாழாகிப் போகிறது!

பெண்களின் இஷ்டத்தை மதிக்காது நரகத்தில் தள்ளுவதுபோல் பெண்களைக் கல்யாணச் சந்தையிலே விற்று விடுகிறார்கள்!

இத்தகைய அவலநிலை கண்டு துடித்தெழுந்து கவிஞன்,

''கல்யாணம் ஆகாத பெண்ணே—உன்
கதிதன்னை நீதிச் சயம் செய்க கண்ணே!
வல்லமை பேசியுன் வீட்டில்—பெண்
வாங்கவே வந்திடு வார்கள்சில பேர்கள்;
நல்ல விலை பேசுவார்—உன்னை

நாளும் நலிந்து சுமந்து பெற்றோர்கள்
கல்லென உன்னை மதிப்பார்—கண்ணில்
கல்யாண மாப்பிள்ளை தன்னையுங் காட்டார்
வல்லி உனக்கொரு நீதி—இந்த
வஞ்சகத் தரகர்க்கு நீஅஞ்ச வேண்டாம்''

என்று மாதர்க்கு மகா துணிச்சலை விதைத்துப் பாட்டிசைக்கிறான்.

பிற்போக்குப் பெற்றார் பெண்டிரை பாழ்கிணற்றில் தள்ள முனைந்தால் அந்நிலையில் பெண்டிர் பெற்றோர் பிடியிலிருந்து விடுபட்டுச் சுதந்திர பாதையில் செல்ல வேண்டுமென கவிஞன் கருதுகிறான்.

இது,

''கனத்த உன் பெற்றோரைக் கேளே!— அவர்
கல்லொத்த நெஞ்சையுன் கண்ணீரினாலே
நனைத்திடுவாய் அதன்மேலும்— அவர்
ஞாயம் தராவிடில் விடுதலை மேற்கொள்!''

என்ற வரிகள் மூலம் வடிவாய் புலப்படுகிறது.

மகாகவி பாரதிதாசன் குழந்தைகளுக்குத் திருமணம் செய்து வைத்திடும் மகாகொடுமைகளுக்கெதிராகவும் ஆவேசமாகப் பாட்டிசைக்கிறார்.

''ஏழு வயதே எழில்கருங் கண்மலர்
ஒருதா மரைமுகம் ஒருசிறு மணியிடை
சுவைத் தறியாத சுவைதருங் கனிவாய்
இவற்றை யுடைய இளம்பெண்— அவள்தான்
கூவத் தெரியாக் குயிலின் குஞ்சு
தாவாச் சிறுமான்' மோவா அரும்பு!

தாலியறுத்துத் தந்தையின் வீட்டில்
இந்தச் சிறுமி யிருந்திடு கின்றாள்''

................................,

என்று கல்லும் உருகும் வண்ணம் ஓர் சோகச் சித்திரத்தைக் கவிஞன் வரைகிறான்!

அந்தச் சிறுமிக்குத் தாயில்லை. தந்தையோ வேறொருத்தியை மணந்தார்.

முதல்மனைவி மகளைப் புறக்கணித்தார்.

புதுமனைவியுடன் தந்தை மகள் எதிரிலேயே சல்லாபம் புரிந்தார்.

இந்தச் சம்பவத்தைக் கவிஞன்,

''அவளை விரும்பி, அவள் தலைமீது
பூச்சூடுகின்றார்; புறக்கணித்தார் எனைத்
''தாமும் அவளும் தனியறை செல்வார்
'அவருக்கு நான் மகள்' அவர் எதிர்சென்றால்
நீபோ! என்று புருவம் நெறிப்பதோ?
பாட்டி மடியில் படுத்துப் புரண்டே
இவ்வாறு அழுதாள் இளம் பூங்கொடியாள்''

என நைந்துருகிப் பாடியுள்ளான்.

விதவைப் பெண்கள் மறுமணம் செய்து புதுவாழ்வு காண வேண்டுமென்று மகாகவி பாரதிதாசன்
ஆவேச கவிதைகள் ஆக்கியுள்ளான்!

ஓர் கைம்பெண் நிலையை

''கோரிக்கை அற்றுக் கிடக்குதண்ணே இங்கு
வேரில் பழுத்த பலா—மிகக்
கொடியதென் றெண்ணிடப் பட்டதண்ணே —குளிர்
வடிக்கின்றவட்ட நிலா!
சீரற் றிருக்குதை யோகுளிர் தென்றல்—
சிறந்திடும் பூஞ் சோலை—சீ
சீஎன் றிகழ்ந்திடப் பட்டதண்ணே நறுஞ்
சீதளப் பூ மாலை''

என்றும்,

''இன்ப வருக்கமெல் லாம்நிறை வாகி
இருக்கின்றபெண்கள் நிலை—இங்
கிவ்விதமாய் இருக்கு தண்ணே இதில்
யாருக்கும் வெட்க மில்லை!

என்றும் கூறித் தொடர்ந்து ஆணுக்கொரு நீதி பெண்ணுக் கொரு நீதி என்ற மோசடித்தனம் களையப்பட வேண்டு மென்ற விழைவோடு

''துணைவி இறந்தபின் வேறு துணைவியை
தேடுமோர் ஆடவன் போல் பெண்ணும்
துணைவன் இறந்தபின் வேறு துணைதேடச்
சொல்லிடு வோம்புவி மேல்.

என்கிறான்.

தொடர்ந்து,

''காதல் சுரக்கின்ற நெஞ்சத்திலே ...... கெட்ட
கைம்மையைத் தூர்க்கா தீர்—ஒரு
கட்டழகன் திருத் தோளினைச் [......சேர்ந்திடச்
சாஸ் திரம் பார்க்கா தீர்!

(கைம்மைப் பழி-கவிதை)

என்கிறான்.

தள்ளாடும் கிழவர்களைத் தளிர்க்கொடி போன்ற பெண்டிர்க்கு மணம் செய்து வைக்கும் இரக்கமற்ற அரக்க மனப்பான்மை எம் சமுதாயத்தில் இருக்கிறது.

ஒரு கிழவனுக்கு வாழ்க்கைப்பட்டு பருவசுகம் காண முடியாப் பைங்கிளி ஒன்று, இத்தகைய இக்கட்டான சூழ் நிலைக்குத் தன்னை ஆளாக்கிய தாயாரை வைது, சாகத் துணிந்த வேளையில் தாயார், மகள் கையிலிருந்து விஷங் கலக்கப்பட்ட பாலைத் தட்டி விடுகிறாள்!

இத்தகைய பொருந்தா மணக் கொடுமையை புதுவை மகாகவி,

''மண்ணாய் போக! மண்ணாய் போக!
சமூக சட்டமே! சமூக வழக்கமே
நீங்கள், மக்கள் அனைவரும்
ஏங்கா திருக்க மண்ணாய் போகவே
(மூடத்திருமணம்—கவிதை)

என்று கோபச் சித்திரமாக வடித்துள்ளான்.

இதுகாறும் மகாகவி பாரதிதாசனின் தமிழுணர்ச்சிக் கவிதைகள், இறைமறுப்புக் கவிதைகள், சமத்துவக் கவி தைகள், பெண்ணுரிமைக் கவிதைகள் பற்றி கண் ணுற்றோம்.

பாரதிதாசன் பல கோணங்களில் கவிதைகள் பாடி யிருந்தாலும் அவன் கவிதைகளில் மிக ஆழமாக— அதிக மாக மின்னும் சிந்தனைகள் தமிழ்ப்பற்றும், இன எழுச்சி யுணர்வும்தான்.

# மகாகவி கம்பதாசன்

மகாகவி பாரதியின் உயிர்க்கனா, தேசமும், தெய்வமும்.

மகாகவி பாரதிதாசனின் உயிர்க்கனா தமிழும், தமிழர்களும்.

இருபதாம் நூற்றாண்டின் மூன்றாவது மகாகவியான கம்பதாசனின் உயிர்க்கனா, சோசலிச சமுதாய விழைவு.

கம்பதாசனின் மிகப்பலக்கவிதைகள் சோசலிச சிந்தனை மலர்களாகவே சுகந்தம் வீசுகின்றன.

தமிழ்க்கவிஞர்களில் மிக அதிகமாகப் பாட்டாளி வர்க்கத்திற்காகப் பாட்டெழுதிய பாவலன் அவனே!

தனது ஆரம்பகாலக் கவிதைகளிலே மகாகவி பாரதி மகாகவி பாரதிதாசன் ஆகியோரின் கவிதைப் போக்குகளை கம்பதாசன் பின்பற்றினான்.

கால ஓட்டத்தில் தனக்கெனத் தனிப்பாணி அமைத்து சோசலிச களத்திலே நின்று உழைக்கும் வர்க்கத்தினருக்காக நவகவி இசைக்கும் மகாகவியாகத் தன்னை வளர்த்துக் கொண்டான்.

மகாகவி கம்பதாசன் கவிதைகளிலே பாட்டாளி வர்க்க மேம்பாட்டுச் சிந்தனைகள் எத்துணை ஆழமாக வேரூன்றி உள்ளதோ அதைப் போல் வேரூன்றி உள்ள பிறிதொரு அம்சம் காதல்!

ஆம்!

கம்பதாசனின் காதல் கவிதைகள் தனிரகம்! மிக அதிக மான தமிழ்க்கவிஞர்கள் கற்பனை மேடையிலே நின்று காதல் கவிதைகள் தீட்டியுள்ளார்கள்.

கம்பதாசன் காதல் கவிதைகளோ அவன் அநுபவத் தின் சித்திரங்கள்.

ஆங்கிலக் கவிஞர்கள் ஷெல்லி, கீட்ஸ் போன்றவர்கள் எவ்வண்ணம் தங்கள் சொந்த வாழ்வின் காதல் வேதனை களையும், பெருமிதங்களையும் கவிதைகளாகப் படைத் தார்களோ அதுபோலவே கம்பதாசனும் படைத்தான்.

வெறும் கற்பனையின் அடித்தளத்தில் பிறக்கும் இலக் கியங்களில் 'செயற்கைத்தனங்கள்' பரவிக்கிடக்க வாய்ப்புண்டு,

ஓர் உன்னதமான கவிஞன் தன் வாழ்வின் அநுபவங் களையே எழுத்தில் கொண்டுவரும் போது நிச்சயம் அது ஜீவனோடு இருக்கும். மகாகவி கம்பதாசன் அழகை ஆராதித்தவன். அவனே பேரழகன்.

மாதர்சிநேகம் அவனைத் தேடிவந்தது. அந்த மனோகர அநுபவங்களை எல்லாம் அவன் கவிதை ஆக்கினான்.

அழகுமாதர்கள் அவனைப்பிரிந்து சென்றபோது சோகம் அவன் ஆத்மாவைச் சுட்டெரித்தது.

கண்ணீர் அவன் கன்னங்களில் கோலமிட்டது.

கம்பதாசன் பேனா சிரஞ்சீவிக் காதல் சித்திரங்களை வரைந்தது.

நான் ஆரம்பத்தில் சொன்னபடி அவன் மிக அதிகமாக அற்புதமாக சோசலிச விழைவோடு உழைக்கும் வர்க்கத் திற்காக கவிதைகள் தீட்டிய மகாகவி.

அடுத்தபடியாக,

என்றென்றும் கவிச்சுவை அறிவார் மத்தியில் வாழக் கூடிய காதல் கவிதைகளை வசந்த மலர்ச் சொற்களினால் புதிய தடத்தில் நின்று தீட்டிய காதல்கவி.

மகாகவி பாரதியின் தேசீய சிந்தனைக் கவிதைகள் அரசியல் சார்ந்தோரால் அதிகம் விளம்பரம் பெற்றுத் தமிழகத்தின் மூலை முடுக்கெல்லாம் பரவியது.

தமிழ், தமிழர்கள், திராவிடர்கள் என்ற கோணத்தில் சிந்தித்த மகாகவி பாரதிதாசன் கவிதைகள் தமிழர்களுக் கிடையே மிகுந்த செல்வாக்குப் பெற்றத் திராவிட இயக் கங்களால் முன்னெடுத்துச் செல்லப்பட்டு தமிழர்களுக்கு மத்தியில் அதிகமாக பிரபலம் பெற்றது.

மகத்தான முறையில் சோசலிச இந்தியாவை உருவாக்க வேண்டுமெனக் கங்கணங் கட்டி ராம்மனோகர் லோகியா, உலகப் புகழ்பெற்ற கவிச்சிற்பி ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா போன்றவர்கள் வளர்க்க முயன்ற சோசலிசக் கட்சி இந்தியாவில் போதியமுறையில் வளராத படியால் அக்கட்சியை சார்ந்து நின்று தமிழில் பாட்டாளி வர்க்கத்திற்காக உன்னத இலக்கியப் பாங்கோடு பாட் டெழுதிய கம்பதாசனும் போதிய புகழைப்பெற முடிய வில்லை.

பாமர மக்களிடம் செல்வாக்குப் பெற்றிருக்கும் அரசியல் கட்சிகளைச் சேர்ந்த சாதாரண கவிஞர்களுக்குக் கிடைத்த விளம்பரம் கூட கம்பதாசனுக்கு கிடைக்காமற் போனது மிகவும் வேதனையான விடயமே!

செக்குமாடு குறிப்பிட்ட இடத்திலேயே சுற்றிச் சுற்றி வருதல் போல் மீண்டும், மீண்டும் பிரபலமான படைப்பாளி களைப்பற்றியே பேசிப் பேசி, எழுதி, எழுதி காலங்கழிக்கும்

தமிழ் இலக்கியத்தில் அதிமேதாவிகளான விமர்சகர்களும் கம்பதாசன் படைப்புகளை ஆழ்ந்து படிக்க வேண்டும் என்ற சிரத்தையின்றியே காலம் கடத்தி வந்துள்ளார்கள்.

இனி மகாகவி கம்பதாசன் கவித்தேன் மாந்துவோம்.

## முற்போக்கு முரசு

தொழிலாளவர்க்கம் காலகாலமாய் முதலாளி வர்க்கத்தினால் இரத்தம் உறிஞ்சப்பட்டு நசுங்குண்ட நிலையிலேயே இருந்து வந்துள்ளது.

இந்த நிலைமாற வேண்டுமென போர் முரசு கொட்டு கிறான் உழைக்கும் வர்க்கத்தின்—உன்னதக் கவிஞன் கம்பதாசன்!

''புழுதினை எமைமிதித்துப் போகின்றீர்கள்
பொறுத்திருந்தோம், பொறுத்திருந்தோம்
இத்தனைநாள்
அழுதழுது முறையிட்டு அலுத்துப் போனோம்
அனுதாபம் காட்டிடுவோர் யாருமில்லை''

என்று பாடுங்கவிஞன்,

''விழிமலரச் செய்தபுது விழிப்பினாலே
விண்ணிடிபோல் போர்முரசு கொட்டுகின்றோம்''

என்று போர்க்குரல் எழுப்புகிறான்.

''புகைகொளுத்தும் தீக்குச்சு என்று எம்மைப்
புன்நெருப்பாய் எண்ணமிட்டுப் போகின்றீர்கள்''

என உழைப்பாளர் சோகத்தைச் சொல்லி, தொழிலாளர் ஆர்த்தெழுந்த நிலைப்பாட்டை,

"தொகை தொகையாய் எழுங்கடலின் திரைகள் போலத்
தூமதிநேர் போர்ச்சங்கம் ஊதவந்தோம்!"
என எடுப்பாக மொழிகிறான்.

தொழிலாளர் பரிதாப வாழ்வுக் கோலத்தை,

"வயலுழுதோம்; வீதியிட்டோம்; வீடமைத்தோம்!
வாழ்விற்குத் தேவைஎலாம் வழங்கி, நாங்கள்
புயமலுத்தோம்! பசித்தீயில் பெண்டு, பிள்ளை
புழுப்போலத் துடிதுடித்து வேகுதையோ!"

என நைந்துருகிப் பாடி,

"அயர்விலாப் புதுவிழிப்புக் கொண்டுவிட்டோம்
அச்சமில்லை, பழிக்குப்பழி வாங்க வந்தோம்!"
என வீர முரசு கொட்டுகிறான்.

இறுதியாக மகாகவி கம்பதாசன்,

"நலமுறவே உழைப்பவர்க்கே உணவு வேண்டும்
நியாமிது; நியாயமிது; நியாயமிஃதே!
அலவெனவே மறுப்பவர்கள் கடவு ளேனும்
அடுத்தக்கணம் அவர் தலைஎம் காலில் வீழும்!"
(புதுக்குரல்—கவிதை)

என மனக்கொதிப்போடு கூறுகிறான்.

தொழிலாளியை இயற்கை அம்சங்களோடு பொருத்தி நவகற்பனை செய்கிறான் கம்பதாசன்.

"சூரியனும் ஓர் தொழிலாளி...... தினம்
சுற்றும் உலகும் தொழிலாளி"

எனப் பாடுமவன்,

''வாரி அலையும் தொழிலாளி...... எதிர்
வந்திடும் காற்றும் தொழிலாளி''
மாரி நதியும் தொழிலாளி...... இருள்
மலரும் உடுவும் தொழிலாளி''

என எழிலோங்கப் பாடி, தொழிலாளியே உலகை நடாத்துகிறான்; அவனே இறைவன் என்பதனை,

''பாரை நடத்தும் தொழிலாளி...... இனிப்
பரமனடா கலைப் பிரமனடா''

என மிகவும் நயமாகச் சொல்கிறான்.

ஏழ்மையில் துடிக்கும் மீனவர்களைப்பற்றி மகாகவி கம்பதாசன் கை வண்ணத்தில் உருவான இரு கவிதைகளைக் காண்போம்.

'செம்படவன்' என்ற கவிதையில்,

''மூடுபனிக் காலையிலே மீன் பிடிக்க
முதலைநிகர் கட்டுமரம் தன்னிலேறி;
ஆடுகின்ற அரவைநிகர் கடலலைமேல்
அச்சமின்றிச் சென்றிட்டான் முத்துமாரி''

எனக் கம்பீரமாகச் சொல்லி,

''பாடும் அலையோசையிலா ஆழம் பார்த்துப்
பனங்குருத்து விரிவதுபோல் வலைவிரித்தான்
ஓடி விளையாடி வந்த மீனினங்கள்
ஒளிபட்ட வைரமெத் துடிக்கலாச்சு''

என எழில்மின்னப் பாடுகிறான்.

மீனவர் அவல வாழ்வை இறுதியாக,

''ஓவெனவே புயல்காற்று நரியைப் போல
ஊளையிட லாயிற்று; அலைக்குமிழ்கள்
ஆவெனவே ஆந்தையதன் கண்களாச்சு;
அலகுகள் போல் மழைத்தாரை பாயலாச்சு!''

''தாவிகரை சேர்வதற்கு முத்துமாரி
தவிதவித்தான்; அவன் உயிரோ சாற்றலாச்சு:
''பூவினிலே மக்கள் பசி போக்குதற்கு
போந்த தொழிலாளி நிலை கண்டேனென்றே''

என அருமையாக தன் பாவளத்தால் கண்முன் காட்டுகிறான் கம்பதாசன்!

'பரவர் பாட்டு' என்ற தலைப்பில் கவிஞன் யாத்த பாடலும் உன்னதமானதாகும்.

''விடிவெள்ளி நம் விளக்கு ஐலேஸா
விரிகடலே பள்ளிக்கூடம் ஐலேஸா
துடிக்கும் அலை நம்தோழர் ஐலேஸா
சூழ்முகிலின் நீழல்குடை ஐலேஸா

என எழுச்சியோடு சொல்கிறான்.

தொடர்ந்து,

''பாயும்புயல் நம்ஊஞ்சல் ஐலேஸா!
பனிமூட்டம் உடல்போர்வை ஐலேஸா!
காயும்ரவிச் சுடர் கூரை ஐலேஸா!
கட்டுமரம் வாழும் வீடு ஐலேஸா!''

என இலக்கிய எழில் கொஞ்ச—உணர்ச்சி அலைமோதக் கூறுகிறான்.

மேலும்,

''பின்னல் வலை நம்சுவடு ஐலேஸா!
பிடிபடும் மீன் கல்விப்பொருள் ஐலேஸா!
மின்னல் இடி காணும் கூத்து ஐலேஸா
வெண்மணலே பஞ்சு மெத்தை ஐலேஸா''

என்று கூறுவதும்,

முடிவாக—

''முழுநிலவு நம்கண்ணாடி ஐலேஸா
மூச்சடக்கி நீந்தல்யோகம் ஐலேஸா
தொழும் தலைவன் பெரும்வானம் ஐலேஸா
தொன்மை தொழி லாளர் நாமே ஐலேஸா''

எனக் கூறுவதும் மிகவும் வியந்து போற்றும் வண்ணம் அமைந்துள்ளது,

''நவராத்திரி கொலு''
என்ற கவிஞனின் கவிதை,

''உழவுத் தொழிலாளி—நுதலில்
உதிர்ந்த வேர்வைத்துளி
கொழுத்த முதலாளி—அணியினில்
கொலுவாச்சு வைரமாய்!''

என அமைந்துள்ளமை பணக்காரப் பாதகர்மேல் எமக்குப் பெருங் கோபத்தை ஏற்படுத்துகிற வண்ணம் உள்ளது.

மேலும்,

''ஆலைத் தொழிலாளி—உடலினில்
அள்ளி எடுத்த ரத்தம்
காலன் முதலாளி—பேலாவில்
கள்ளாய் கொலு வாச்சு''

என ஆவேசபாசச் சவிஞன் எழுதுகிறான்.

அச்சுத் தொழிலாளர் அவலவாழ்வினை,

''அச்சுத் தொழிலாளி—கண்ணிலே
ஆடும் ஒளி அணைய
கொச்சை முதலாளி—வீட்டில்
கொலுவாச்சு விளக்காய்''

என்ற வரிகள் வனப்பாக இயம்புகின்றன.

இதுவே சமுதாயத்தில் நாம் நேர்காணும் கொலு! மண்பாவை கொலுவைப்பதில் அர்த்தம் என்ன இருக்கிறது எனும் கோணத்தில்,

"உண்மைக் கொலுவிதனை—உங்களின்
உள்ளம் பார்க்கையிலே
மண்பாவைக் கொலுவைக்—கண்டிட
மயங்கிச் செல்லுவதேன்"

என மகாகவி கம்பதாசன் வினவுகிறான்!

'படகோட்டி' இக்கவிஞன் யாத்த அற்புதமான கவிதைகளில் ஒன்று.

ஒரு ஏழைப் படகோட்டியின் ஆத்மதாகத்தை இது அருமையாகச் சொல்கிறது!

"தேன்தூக்கி முல்லைமலர் சிரிக்கத் தென்றல்
சிலிர்க்கவரும் வசந்தத்தின் மாலைப் போதில்
வான்நோக்கி நிற்கின்ற வரையின் மீது
வாரியென நீர்தேக்கும் ஏரிதன்னில்
அன்னம்நிகர் படகோட்டிப் பிழைப்போம்; வேர்வை
அரும்பிடவே புயமலுக்கத் துடுப்புத் தள்ள,
மின்னலிடைப் பெண்ணுடனே செல்வன் ஒருவன்
மிதந்துசெலும் அப்படகுள் மெள்ளத் துயின்றான்"

ஏழைப்படகோட்டி செலுத்திய படகில் பணக்காரக் காதலர்கள் பரவசத்தில் மிதக்கிறார்கள்!

ஏழையோ காலங் கரைவதை எண்ணி,

"பூத்திருக்கும் வேப்பமரத் தோப்பில் நேற்றுப்
புனைந்தகுடி சையிலில்லாள் பசியால் வாடிக்
காத்திருப்பாள் வழிபார்த்து, இவர்கள் எப்போ
கண்விழித்துக் காசீவார்? எழுப்ப லாமா?"

என அங்கலாய்த்து நிற்கிறான்.

ஏழைப்படகோட்டி மனத்தே கனவுச் சித்திரங்கள்!

அவன்,

''சொல்லரிய உள்ளுணார்சி விழிசுழற்றத்
துளிரிதழின் முத்தத்தின் சுவையில் தோய்ந்து
எல்லையிலா இன்பத்துள் மூழ்கி யுள்ளார்!...
இவர் காணும் இன்பமெனக் கேனோ இல்லை''

என ஏங்கி,

''பாரினிலிக் காதலர்கள் செல்வர்; நல்ல
பட்டுடையும் பொன்மணியும் கொண்டோர் இந்தப்
பாரிடையே வேண்டுகின்ற இன்பமெல்லாம்
படைத்திடுதல் பணமதனின் சக்தியன்றோ?''

என வருந்தி

'பணமுடையோனுக்கே எல்லாம் கைகூடும்' என்ற உண்மையைத் தெரிந்து கொள்கிறான்.

''நாளை நானும் பணக்காரன் ஆகிவிட்டால்?'' என்ற நைப்பாசை ஏழையின் நெஞ்சில் மலர்கிறது.

அவன்,

''நாவடக்கிச் சேவகஞ்செய் யானே நாளை
நல்லதொரு காலம்வந்து செல்வ னானால்,
பூவணையும் வண்டெனவே என்ற னில்லாள்
புயமணைந்து படகினிலே பூரித்துய்வேன்''

என எண்ணி,

''அந்தநாள் என்படகை இந்நாளிங்கே
அமர்ந்திருப்போர் தள்ளவரின் அப்போ தின்னார்
சிந்தைதான் மகிழ்வுறுமோ? இன்றென்னைப்போல்
செப்பரிய ஏக்கத்தால் துயரில்வேமோ?''

என்று கற்பனை செய்கிறான்.

தொடர்ந்து,

''என்னைப்போல் இன்னவரும் எல்லாம் வல்ல
ஈசனருட் படைப்பன்றோ இந்தப் பாரில்

இன்பந்தான் பிறரடைய ஒருவர் துன்பம்
ஏற்பதுவோ? இதிலுள்ள நீதி என்ன?''

என சிந்திக்கிறான்.

'படகோட்டி' பாடல் மூலம் மகாகவி கம்பதாசன் சமுதாய ஏற்றதாழ்வுப் போக்குகளை மிகத் துல்லியமாக அடையாளங் காட்டுகிறான்.

'பிச்சைக்காரன்'என்ற தலைப்பில் கம்பதாசன் யாத்த கவிதை இல்லானின் இதயசோகத்தை த உன்னதமாக இனங் காட்டுகிறது.

''மழை இளைப்பாறிட குட்டையுண்டு—கொடும்
மனதிளைப்பாறிட எண்ண மூண்டு
அழல் இளைப்பாறிட நீருமுண்டு—எங்கள்
ஆசை இளைப்பாற உண்டோ இடம்?''

என ஜீவநெகிழ்ச்சியோடு கூறி,

.........

''நதியிளைப் பாறிட ஆழியுண்டு—கொடும்
நஞ்சிளைப் பாறிட மருந்துமுண்டு
கதிரிளைப் பாற இரவுமுண்டு—எங்கள்
கவலை இளைப்பாற உண்டோ இடம்?''

எனச் சொல்லும்போது எமது நெஞ்சையும் இனந்தெரியாத சோகம் கவ்வுகிறது!

இதுதானே உண்மைக் கவிதையின் வெற்றி?

மகாகவி கம்பதாசன் இப்பாடலின் இறுதியில்

''கண்ணிளைப் பாறிடத் தூக்கமுண்டு—அற்ப
கழுதை யிளைப்பாறிடத் துறையுமுண்டு''

எனப் பாங்கோடு எழுதி,

''பல்லினைப் பாறிடத் தாளமுண்டு—எங்கள்
பசியினைப் பாறிட உண்டோ இடம்?''

என்கிறான்.

இருபதாம் நூற்றாண்டின் மிகச்சிறந்த தமிழ்க்கவிதைகளில் இதுவும் ஒன்றெனச் சொல்வதற்கு தடையுமுண்டோ?

'மாற்றம்' என்ற தலைப்பில் மகாகவி கம்பதாசன் மகத்தானதோர் கவிதை எழுதியுள்ளான்.

தொழிலாளர் தம் உழைப்பினால் உலகை மாற்றி விட்டார்கள்! ''கடவுளே உனக்கு என்ன வேலை போ! போ!'' என்று கடவுளையே பழிக்கும் கோலத்தில் கவிதை உள்ளது.

''எல்லையிலாத் தெய்வமேநீ போவாய்
போவாய்!
இருந்திடிலோ இவ்வுலகில் சாவாய்! சாவாய்!
வல்லமையாய் நீபடைத்த கொடிய காட்டை
வளநாடாய்த் தொழிலாளர் மாற்றி
விட்டார்

என்கிறான்.

..............................

''கல்லினிலே நீகரியைச் சேர்த்து வைத்தாய்
கதிர்மணியாய்த் தொழிலாளர்
மாற்றி விட்டார்''

என எழுச்சியோடு கூறுகிறார்.

மேலும் இக்கவிதையில்

..............................

''கள்வனென மறைந்தோடக் காற்றை வைத்தாய்
காரமிடத் தொழிலாளர் மாற்றி விட்டார்;

தள்ளரிய ஜாதிநிற பேதம் வைத்தாய்
சமமென்றே தொழிலாளர் மாற்றிவிட்டார்
தெள்ளரிய பகுத்தறிவால் மாற்றம் கண்டு
ஜெயபேரி தொழிலாளர் முழக்குகின்றார்!''

என்ற பகுதியும் மகாகவியின் தனித்துவ சிந்தனைத் திற னுக்கும், தொழிலாளர்பாலுள்ள ஆத்மார்த்த ஈடுபாட் டுக்கும் அற்புதமான சான்றாக உள்ளது!

தொழிலாளர் கையில் ஓர்நாள் ஜெகமே வசமாகும் என 'எச்சரிக்கை' என்ற கவிதையில்

''தண்ணீ ரதனில் தணலெழுங்கால்
சாவின் நிழலில் பிறப்பெழுங்கால்
மண்ணைப் பொன்செய் தொழிலாளர்
மதியில் புவிஆள் விதி எழாதோ?''

என்ற வரிகளாலும்

''நத்தை யிடத்திலே முத்தெழுங்கால்
நாற்றச் சகதியில் பூஎழுங்கால்
உத்தம ராகிய தொழிலாளர்
உள்ளத்தில் உலகாள் உரமெழாதோ?''

என்ற வரிகளாலும்—

மிடுக்கோடு—இலக்கியச் செறிவோடு தமது தொழி லாளர் நேயத்தை நிறுவுகிறான் கவிஞன்.

'கடவுளும் மனிதனும்' என்ற கவிதையும் கம்ப தாசனின் உழைப்பாளர் வாஞ்சையை எடுப்பாக இனங் காட்ட வல்லது.

''மீன்குஞ்சு விளையாடக் கடல் படைத்து
மேலான வான்சென்று கடவுள் பார்த்தார்
தேன்கூடு போன்றவலை திறமாய் பின்னி
செம்படவன் மீன்பிடித்து விற்க லானான்,

பார்த்த கடவுள் பதை பதைத்தார்
பார்க்கா மரண இருள் ஒளித்தார்''

என அருமையாக கூறுகிறான்.

மேலும்,

''பச்சைக்கிளி கனிதின்னப் பசியமாவை
படைத்திட்ட கடவுள்வான் சென்று பார்த்தார்
தச்சனுமே மாமரத்தை வெட்டிக் கூண்டு
சமைத்ததனில்கிளிதன்னைப்பிடித் தடைத்தான்'

''பார்த்த கடவுள் பதை பதைத்தார்
பார்க்கா மரண இருள் ஒளித்தார்''

என படைத்த கடவுளுக்கே மானுடன் தன் உழைப்பின் வெற்றியால் சவால்விடும் பாங்கைப் பகர்கின்றான்.

மேலும்,

''தேரையது வாழ்ந்திடவே பாறை தன்னைச்
சிருஷ்டித்த கடவுள் வான்சென்று பார்த்தார்
பாறைகளைப் பிளந்தெடுத்து சிற்பி தானே
படைத்திட்டேன் கடவுள்சிலை கல்லி லென்றான்

பார்த்த கடவுள் பதை பதைத்தார்
பார்க்கா மரண இருள் ஒளித்தார்''

என்கிறான் கவி.

முத்தாய்ப்பாக,

மதுக்குமுதம் கண்மலர மதியம் தன்னை
மணிவானில் படைத்திட்ட கடவுள் பார்த்தார்
புதுவிதமாய் மதியதனைப் பறக்க விட்டு
போட்டியிடும் விஞ்ஞானப் பூதம் கண்டார்

பார்த்த கடவுள் பதை பதைத்தார்
பார்க்கா மரண இருள் ஒளித்தார்''

என பகுத்தறிவின் திறவுகோலால் இயற்கையின் மர்மக் கபாடங்களைத் திறக்கும் விஞ்ஞானத் தொழிலாளர் உழைப்பின் மேன்மையை உணர்த்துகிறான் மகாகவி கம்பதாசன்!

செல்வத்தின் மடியிலே ஆனந்தத்தின் அணைப்பிலே வாழ்வோர் சிலராகவும், வறுமைப் பிடியிலே—சோகத்தின் தோழமையோடு வாழ்வோர் பலராகவும் உள்ளனர் பாரதநாட்டிலே!

இந்தக் கொடுமை மகாகவி கம்பதாசன் மனத்தை ரணப்படுத்துகிறது.

இதனை,

''நீங்கள் சிலபேர்' என்ற கவிதை மூலம்

''நீங்கள் சிலபேர் நிலம்படைத்தோர்
நாங்கள் பலபேர் ஏர் உழுவோர்
நீங்கள் சிலபேர் விருந்துண்போர்
நாங்கள் பலபேர் பசித்திருப்போர்''

என—

உணர்ச்சி பொங்கக் கூறுகிறான்.

இக்கவிதையில்,

..............................

''நீங்கள் சிலபேர் ரோஜாமலர்
நாங்கள் பலபேர் கூர்முட்கள்
நீங்கள் சிலபேர் தோன்றுபிறை
நாங்கள் பலபேர் நட்சத்திரம்''

என்ற பகுதியும் மிகுந்த நெகிழ்ச்சியோடு அமைந்துள்ளது.

அழகிய நட்சத்திரங்களைப் பாடும்போதும் கம்பதாசனுக்குப் பாட்டாளி வர்க்கச் சிந்தனையே அலைமோதுகிறது!

> ''புகையிலை தெறிக்கும் கனற்பொறிபோல்—
> இருள்
> போர்வையில் மின்னிடும் தாரகைகள்
> வகையில் உழவர் குலமதுவே—நுதல்
> வைத்திடும் வியர்வைப் பொட்டுகளோ?''

என எழுதுகிறான் அவன்.

''மழைத்தாரை''யைப் பாடும் போதும் இந்த மகாகவி.

..............................

> ''தேனொளிர்ப் பூங்கணை மன்மதனே—காதல்
> சேதி சொல்லிவிட்ட தூதுவரோ?''

எனக்கூறிவிட்டு,

> ''ஏனெனக் கேட்பாரற்ற உழவர்— நிலைக்கு
> ஈசன் உகுக்கும்கண் ணீர்த் துளியோ?''

என நேர்த்தியாக எழுதுகிறான்.

'உழவன் பிள்ளை' என்ற கவிதையிலும் கம்பதாசன் சிந்தனை வானைமுத்தமிடும் வண்ணம் மேலோங்கி மின்னுகிறது.

> ''ஏழை உழவனின் சேயென்றன்
> எண்ணம் ஈடேற வகையுளதோ?
> தோழரிடத்திலே சொல்ல எனில்
> துக்கமே நெஞ்சைப் புடைக்குதையா?''

என்கிறான்.

மேலும் நளினமாக

> ''சுந்தரச் செக்கரை முன்னொரு நாள்
> சிந்தூர மென்று முத்தமிட்டேன்!
> அந்தோ! அஃதென்றன் மூதாதையர்
> சிந்திய குருதிக் கண்ணீரையா!''

''பின்னர் ஓர்தினம் இன்புறவே
பெரிய விண்மீன் தனைமோந்தேன்
என்னே! அஃதென்றன் தந்தைநுதல்
இருந்த வேர்வைத் துளி கண்டீர்''

''வந்திடும் தென்றலில் மற்றொருநாள்
வண்ணத் தமிழிசை கேட்டிட்டேன்!
''அந்தோ! அஃதென்றன் தாய்பசியால்
வெந்திடும் வேளையில் விட்டஉயிர்''

என்று கவிதையை இலக்கிய எழில் சுடர, யாத்துள்ளான்.

வசந்தச்சந்திரனிலும், காலைக்கதிரினிலும், மந்த மாருத வீச்சினிலும், எழில்மாதர் உதடுகளிலும் கவிதையைக் காணும் கவிஞர்கள் ஆயிரக்கணக்கில் உள்ளார்கள்.

மகாகவி கம்பதாசன் எங்கே கவிதையைக் காண்கிறான்?

இதோ பதில்:

''கலை வீசும் நிலவினிலே காண வில்லை!
கமழ் வீசும் மலரினிலே காண வில்லை!
அலை வீசும் கடலினிலே காண வில்லை!
அணி வீசும் வானவில்லில் காண வில்லை!
மலைவீசும் தென்றலிலே காண வில்லை;
மணிவீசும் ஜொலிப்பினிலே காண வில்லை!
குலைவீசும் பசியினிலே ஏரைஓட்டும்
குடியான மக்களிடம் கவிதை கண்டேன்''

என கவிதையின் இருப்பிடத்தை பாட்டாளி வர்க்கத்தின் மேம்பாட்டுக்காக தமிழில் அதிகமாக—அருமையாகப் பாட்டெழுதிய மகாகவி கம்பதாசன் சொல்கிறான்!

## காதல் கவிதைகள்

''காதலின் கூத்தை எல்லாம்—உன்
கவியினில் கண்டே னைய்யா''

என்று கம்பதாசன் காதல் கவிதைகள் பற்றிக் குறிப்பிடுகிறார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

நான் ஏற்கனவே சொல்லியதைப்போல் கம்பதாசனின் காதல் கவிதைகள் அந்த மகாகவிஞனின் அநுபவத்தின் சித்திரங்கள்.

அதனாலேயே அந்தக் கவிதைகள் ஜீவனோடு பொலிகிறது; உதய மலர்களாக உன்னத சுகந்தத்தை அள்ளி வழங்குகிறது!

'காதல் தத்துவம்' என்ற கவிதையில்,

''அழகுத் தீயின் ஜ்வாலையாகும்
காதல் என்பதே—அஃது
ஆண் பெண் எனும் இருகரைக்குப்
பால மாகுமே''

என்கிறான்.

''காதல் பாதை'' என்ற கவிதை கம்பதாசனின் கவித்துவத்தை மகோன்னதமாக இனங்காட்டும்வண்ணம்,

''கடல்நீலம் வான்நெஞ்சில்
கமழுகின்ற காலம்
கவின்மலரில் தேன்வந்து
களிப்பெய்தும் வேளை
அடர்காவில் சூழ்ந்திருக்கும்
அமைதி நிகர்சோலை

ஆச்சர்யம் கண்மலர்ந்து
அமைத்த கனாப்பொய்கை
அருகினிலே கருக்கிருளில்
அழகுக் காதல்பாதை!''

என அமைந்துள்ளது!

இக்கவிதையில்,

''நட்சத்திர வண்டினங்களை
நனவின் அனல்மொய்க்கும்
நமபயத்தின் புதையலினை
ஞானப் பேய்காக்கும்''

என ஒவ்வொருவரிகளும் வைரமணிபோல் ஜொலிக்கிறது!

'காதல்' என்ற கவிதையில் கவிஞன் காதலைப்பற்றி,

''பூதலந் தன்னையே கையேந்தலாம்
பொங்கிய காதலால் வான்நீந்தலாம்''

என மிடுக்காய் மொழிகிறான்.

'பிணைப்பு' என்ற கவிதை,

''அந்த நாள் அடவிவழி தனிலே நீயே
அலர்ந்த ஒருமலராக இருந்தாய் போலும்
அந்தநாள் அவ்வழியாய் சென்ற கொண்டல்
அமுதஒரு நீர்த்துளியாய் உனில்வீழ்ந் தேனோ?
''அந்தநாள் அளப்பரிய தாரை சூழ்ந்த
அணிநீல இருளாய்நீ இருந்தாய் போலும்
அந்தநாள் யான்தனித்த கூண்டின் புள்ளாய்
அழகதனை விழிக்கனவின்இடைநுகர்ந் தேனோ?'

என அருமையாக கவிஞனால் புனையப்பட்டுள்ளது.

'திராட்சைமது' எனும் கவிதையை மதுவிழைவும் மங்கை விழைவும் அலைமோத,

''திவ்யமது திராட்சைமது ஊற்றடி பெண்ணே
செக்கரென ரத்தவொளி சேர்ந்திடக் கண்ணே

சி—5

கல்வுதுயர் காலமது கனவென ஓடக்
கடலாடும் அலையெனவே களிப்புடன் ஆட''

என்று,

வெகுநேர்த்தியாக— அநுபவச் சித்திரமாக கம்ப தாசன் வரைந்துள்ளான்.

மகாகவி கம்பதாசன் கேரளத்துப் பேரழகி, நாட்டிய ராணி சித்ரலேகாவைக் காதலித்தான்.

கருத்தொருமித்த காதலியுடன் இணைந்து வாழ்ந்தான்.

விதியின் ஜாலத்தால் சித்ரா கம்பதாசனைப் பாலையில் விட்டுப் பறந்தாள்.

சித்ராவைப் பிரிந்த சோகநாளின் இராமுழுதும் சிதறுண்ட ஆன்மாவோடு இரத்தத்தில் தன் பேனாவைத் தோய்த்துப் 'பாட்டு முடியுமுன்னே' என்ற நூலை 1952இல் எழுதினான்:

''பாட்டு முடியுமுன்னே மீட்டிய வீணையை
பக்கம் வைத்தே நடந்தாய்— இனிதாய்
கேட்ட நினைவே கண்ணீர்த் துளியில்
கீதமிசைக்குதடி—காதல்'' (பாட்டு)

என—

நெக்குருகி எழுதினான்.

''நாசினியில் மின்விட்டு பொழியா கார்போல்
காதலதும் கண்ணீரும் பிரிந்தி டாதோ?''

என்றும்,

''கஞ்சமைத்த வெண்பருக்கை அனையஎன்றன்
கண்ணீரால் கொடுங்காலப் பசிமாறாதோ?''

என்றும், உன்னதபாக்கள் பொழிகிறான்.

நாட்டியதேவதையை நினைத்து,

''பொன்னிறத்து புனைமயில் நின் நடனரேகை
பூங்கொடிதான் தென்காற்றில் புரளும்போது

என்நயனம் தொட்டழைத்துப் பிறகே மாற்றி
ஏக்கமெனும் எரிதழலின் ஜ்வாலையாச்சே''

என எழுதி தமிழறிந்தார் விழிநனைக்கிறான்!

தன்துணைவிமேல் அன்பின் ஆதிக்கம் செலுத்தி அதனால் தான்செய்த தவறுகள்தான் அவள்தன்னைப் பிரிந்ததன் காரணமென கருதி,

''சித்திரமே வரைந்ததில் உன் செழிய கோலம்
சிறைபிடித்து வைத்திடவே ஆவல் மீறி
எத்துபல செய்திட்டேன் கண்டதென்ன?
ஏமாந்தேன் தேன்மாந்தா வண்டுபோல?''

என எழுதி அங்கலாய்க்கிறான்.

பிரிவுத்தீயில் கருகிய மகாகவிஞன்,

''சூழ்ந்தடிக்கும் சோகமெனும் சூறைக்குள்ளே
சுழலுதடி என்உள்ளம் பஞ்சு போலே!
வாழ்ந்திருந்து நீபுனையும் சேலைதன்னில்
வரிஇழையாய் ஆவதற்கு வகைதானுண்டோ?''

என்கிறான்.

தன் ஆசைத்துணைவி கர்ப்பமுற்று மகவை ஈந்தளித்த அநுபவ நிகழ்வை,

''தேன்பிலிற்றும் மொட்டெனநீ கர்ப்ப முற்றுத்
தெய்வீகப் பாலகனை ஈன்ற வேளை
வான்பிளந்த புதுப்பலமே என்றன் தோளில்
வண்ணமொடு குடியேறி நின்றதேடி!
கான்புகுந்த அமைதியெனக் கலந்த வாழ்வின்
கலயத்தை விதிக்கையே உடைத்ததாலே
பேன்நிறைந்த கூந்தலென என்னை எண்ணி
பிறரிடமா சிப்பதனை கேட்கச் சென்றாய்?

என்று இலக்கிய எழில் கொஞ்ச—தன்னுள் சோகம் மிஞ்சக் மகாகவி பாட்டிசைக்கிறான்.

காதலின் குதூகலத்திலே சித்ராவோடுகழித்தமையை,

''கண்டு கொண்டேன் நானே—காதல்
என்ன வென்று தானே
விண்ணின் விரிவிலும் பெரிது—ஆல்
வித்ததிலுமே சிறிது
தண்ணீரதிலுமே மெலிது— சூழ்
சர்வதனிலுமே வலிது''

..............................

என நினைவுகூர்ந்து காதல் தத்துவத்தைக் கவின், கவியாய்க் கட்டுகிறான்.

''தனித்துநின்ற நிழல்கள் ரவிநீங்கத்
தழுவல் போலக் களித்தோம்''
இனித்த எண்ணத்தாலே வெறிஎழ
இதழ்கள் மோதத் திளைத்தோம்''

என்று

புதுமை நயமோங்க சுயானுபவத்தை அமர இலக்கியமாக வடிக்கிறான் மகாகவி.

கம்பதாசன் பலவகைப்பட்ட பாக்களை புதிய புதிய கோணங்களிலே தனித்துவ களத்திலே நின்று தீட்டிய உன்னத கவிஞன்!

மகாகவி பாரதியின் கவிதைகளில் ஆன்மிகமும், தேசப் பற்றும் மிக அதிகமாக ஆழமாக,வேரூன்றியிருத்தல்போல்,

மகாகவி பாரதிதாசன் கவிதைகளில் மொழி, இன உணர்வுகள் ஜீவதுடிப்பாக மின்னுவது போல்

மகாகவி கம்பதாசன் கவிதைகளில் அதிகமாக—ஆழமாக ஜொலிப்பது சமத்துவச் சிந்தனைகளும், காதல் அநுபவச் சிந்தனைகளும்தான்.

பொதுவில்—

பாரதி, பாரதிதாசன், கம்பதாசன் மூவரும் இருபதாம் நூற்றாண்டின் மகாகவிகளே!

காலம் இக்கூற்றை மேலுங் கம்பீரமாக நிறுவும்!

o o o



சிலோன் விஜயேந்திரன், எம்.ஏ.,டி.லிட்.

- நண்பர் சிலோன் விஜயேந்திரன் மதுரையைச் சேர்ந்த ஜெயசீலி, இலங்கை - யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த ஆசுகவிகல்லடி வேலுப்பிள்ளையின் மகன் இரத்தின சபாபதி ஆகியோருக்கு மகனாகப் பிறந்தவர்.
- 1979-இல் தமிழகம் வந்த இவர், பாரதியார் வரலாற்றினை உள்ளடக்கி 'பாரதி வரலாற்று நாடகம்' என்ற முதல் நூலைத் தமிழுக்கு வழங்கியவர்.
- மறைக்கப்பட்ட மகாகவி கம்பதாசன் வரலாற்றை விரிவாய் ஆராய்ந்து முதல் நூல் எழுதியவர். கம்பதாசனின் கவிதைகள், காவியங்கள், கதைகள், திரைப்பாடல்களை ஆய்வு செய்து, தொகுத்துத் தமிழர்க்கு வழங்கியவர்.
- 'ஈழத்துக் கவிதைக் கனிகள், 'ஈழத்துக் கவிதை விமர்சனம்' நூல்கள் மூலம் முதன் முதல் விரிவாக ஈழத்துக் கவிதை வளர்ச்சியைத் தமிழ்நாட்டிற்கு அடையாளங் காட்டியவர்.
- 'அறுபதாண்டு காலத் திரைப்பாடல்களும், பாடலாசிரியர்களும்' என்ற விஜயேந்திரனின் பெருநூல் திரைப் பாட்டிலக்கிய வளர்ச்சி பற்றி முதன் முதல் தமிழ் உலகிற்கு விரிவாக அடையாளங் காட்டிய நூலாகும்.
- தலைசிறந்த தனித்துவ இலக்கிய ஆய்வாளரான இவர், மிகச் சிறந்த கவிஞர், பழுத்த அநுபவம் மிக்க நவரசத் தனிநடிப்புக் கலைஞர். 77 திரைப்படங்களில் நடித்து மிகு புகழ் பெற்றவர்.

- வெ. தவராஜசிங்கம்